# மொழி உரிமை



கு. வெ. கி. ஆசான்

# மொழி உரிமை

கு. வெ. கி. ஆசான் க.மு.,ச.இ.
கல்வி அகம், கோவை-641002.

பூங்குன்றன் பதிப்பகம்
திருவேங்கடம் தெரு,
வடகோவை, கோவை-641 002.

2/3/79

# Bibliographical Data


| | | |
|---|---|---|
| Title | : | Mozhi Urimai (Linguistic Right) |
| Language | : | Tamil. |
| Author | : | G. V. K. Aasaan M. A., B. L.<br>Kalvi Agam, Coimbatore - 2. |
| Publisher | : | Poongunran Publishers.<br>Thiruvenkadam Street,<br>Vada kovai, Coimbatore - 2. |
| Copy Right | : | Author. |
| Edition | : | Third - September 1987.<br>(First - Jan 1968,<br>Second - Jan1978) |
| Paper used | ; | White Printing - 11.6kg. |
| Size of the book | : | 1/8 Crown |
| Printing types used | : | 10 Foint |
| Bindiug | : | Thick Wt. maplitho wrapper |
| Number of Copies | : | 1000 |
| Number of Pages | : | 92 |
| Price | : | Rs : 8.50 |
| Printers | : | AMAITHI ACHAGAM,<br>Thiruvenkadam Street,<br>Vada Kovai,<br>Coimbatore - 641 002.<br>Phone : 32014 |

# உள்ளுறை ...

காணிக்கை

மொழி உரிமைப் போரில் இன்னுயிர் ஈந்தோர்க்கு

# மூன்றாம் பதிப்பிற்கான முன்னுரை

இந் நூலின் முதற் பதிப்பை சுமார் இருபது ஆண்டுகட்கு முன் எழுதுகையில் மொழியுரிமை பற்றி எனக்கிருந்த கருத்தும் உணர்வும் இன்றும் மாறவில்லை. அதற்குப் பின்பு பெற்ற பட்டறிவும், தெரிவும், இந்தி ஆதிக்க எதிர்ப்பு இன்னும் கூர்மையாக வேண்டுமென உணர்த்துகின்றன. இன்றைய நிலையில் புதிதாக இந்நூலின் கருத்துக்களை யான் எழுதினால், அது வேறுவகையாக அமையும்.

இருப்பினும் அடிப்படை மாற்றங்களின்றி, அன்றெழுதிய வகையிலேயே வெளி-வருகிறது. இரண்டு புதிய தலைப்புகளையும், அறிஞர்களும் தலைவர்களும் மொழிக் கொள்கை பற்றிக் கூறிய கருத்துக்களையும் சேர்த்-துள்ளேன். இவற்றில் 1948 ஆம் ஆண்டு மேற்கோள்கள் 'விடுதலை' வெளியீடான இந்திப்போர் முரசுவில் இருந்தும், 1963 ஆம் ஆண்டைச் சேர்ந்தவை கல்கி கிழமை ஏட்டில் இருந்தும் எடுக்கப்பட்டவை.

ஆத்திர அவசரமும், ஆரவாரக் களி-யாட்டத்தில் ஆசையும், அனைத்து வகை அச்சமும் நீங்கிய இளைஞர் உலகே எழுக! உங்கள் அறிவார்ந்த துணிந்த இணைந்த சோர்வற்ற செயற்பாட்டால் தமிழர் நலன் காக்க விரைக!

—கு. வெ. கி. ஆசான்

# இரண்டாம் பதிப்பிற்கான முன்னுரை

இவ்வேட்டின் முதற்பதிப்பிற்குப் பத்தாண்டுகளுக்குப் பின் சில சிறிய மாற்றங்களோடு இப்பதிப்பு வெளிவருகிறது. இப்பணியைப் பெரிதாகப் பாராட்டி, நண்பர் திரு. கு. தனசேகரன் போன்றவர்கள் நல்கும் ஊக்கத்தாலும், ஆக்கத்தாலும் மொழிச்சிக்கலைப் பற்றிய என் கருத்துக்களை ஏந்திய இந்நூலை இரண்டாம் முறையாக மக்களிடையே உலவ விடுகிறேன்.

தமிழகத்தில் 1938-ஆம் ஆண்டு துவக்கப்பட்ட மொழி உரிமை இயக்கத்தின் கொள்கை அடிப்படையைச் சுருக்கமாகத் தொகுத்துரைக்க வேண்டுமென்ற வேட்கையில் இந்நூல் எழுதப்பட்டது. இயக்கத்தின் குறிக்கோளான மொழிச் சமத்துவம் இன்னும் நம் நாட்டில் நிறுவப்படவில்லை. நடுவண் அரசு இந்தியத் தேசிய இனங்கள் (Indian Nationalities) அனைத்திற்கும் பொதுவான ஒன்று; அது இந்தியத் தேசிய மொழிகளனைத்திற்கும் ஒரே நிறையளிக்க வேண்டும்.

அறிஞர் அண்ணா அவர்கள் முதல்வராகத் திகழ்ந்த பொழுது நமது பள்ளிகளில் இந்தியை ஒரு பாடமாகக் கற்றுத் தர வேண்டியதில்லையென்ற முடிவினை மாநில அரசு ஏற்றதால் நமது இனத்தின்-தமிழ்த்தேசியத்தின்-தனித் தன்மைக்கும் உரிமைக்கும் காப்பு ஏற்படுத்திக் கொள்வதற்கான வழியேற்பட்டது. ஆனால், அதையடுத்து நடுவண் அரசாங்கத்தின் ஒப்புதலின் பேரில் பல்கிப் பெருகியுள்ள உயர்மட்டப் பள்ளிகளில் (Higher Secondary Schools) இந்தியும் ஆங்கிலமும் மட்டுமே ஏற்றம் பெற்றுள்ளன; நடுவண் அரசு அலுவல்களுக்கு நமது தாய் மொழி தேவையில்லை என்ற நிலை வேறு; இந்தச் சூழலில் தமிழுக்கான இடம் மிகத் தாழ்வானதாகவிருக்கிறது. மூன்று வயதுக் குழந்தைகளுக்குக் கூட வேற்று மொழிகள் கற்றுத்தருவதாக விளம்பரப்படுத்தி, சிறார் பள்ளிகள் துவக்கப்படுகின்றன; நமது மொழிக்கு இடம் தரும் இளஞ்சிறார் பள்ளிகளே காணோம். அதிகக்கட்டணம் கொடுத்தேனும் வேற்று மொழிகள் கற்பதற்கும், அவற்றைப்

பயிற்று மொழிகளாகக் கொள்வதற்கும் தங்கள் குழந்தைகளைச் சிறுவயதிலிருந்தே பெற்றோர்கள் ஆயத்தப்படுத்தி வருகிறார்கள். அரசியல் நிருவாக, வாணிக, தொழில் துறைகளில் அதற்கான சூழல்தான் நிலவுகிறது. அதோடு தாய் மொழி வழிக் கல்வியில்தான் நிலையான, உறுதியான, உண்மையான, வேகமான வளர்ச்சியைப் பெற முடியும் என்ற தெளிவு நம் மக்களுக்கு இன்னமும் உண்டாகவில்லை; மேலும், அவர்களுக்கு-குறிப்பாக மேல் தட்டு மக்களுக்கு-இனத் தன் மானம் என்பதேயில்லை. இப்படியெல்லாம் இருக்கும்பொழுது தமிழைப் பயிற்று மொழியாக ஏற்போருக்கு இலவசக் கல்வி அளிக்கப்படும் என்ற ஏற்பாடு எள்ளளவும் பயன் தரப் போவதில்லை.

தமிழ், ஆங்கிலம் என்ற இரண்டில் ஏதேனும் ஒன்றைப் பயிற்று மொழியாகக் கொள்ளலாம் என்ற திட்டம் பெருங்கேடு விளைவிக்கிறது. ஆங்கிலத்தைப்பயிற்று மொழியாகக் கொள்வோர் உயர்வுச் சிக்கலுக்கும், தமிழைப் பயிற்றுமொழியாகக் கொள்வோர் தாழ்வுச் சிக்கலுக்கும் ஆட்பட்ட மனக்கோணல் காரர்களாகத் திரிகிறார்கள். தேர்ந்தெடுத்துக் கொண்ட துறையில் ஆழ்ந்துயர்ந்தகன்ற அறிவைப் பெற வேண்டும் என்ற நாட்டமில்லாமல், அயல் மொழிகளை மேற்போக்காகத் தெரிந்து கொள்வதில் அதிக அக்கறை காட்டுகிறார்கள். அதோடு, நமது சமுதாயத்தில், மொழியறிவடிப்படையில் அமைந்த தன்னலம் பேணும் புதிய குழுக்கள் ஏற்படுகின்றன மத்திய அரசாங்கக் கல்விக் கூடங்கள் அமைந்தபின் இந்தப் போக்கு ஆபத்தான முறையில் விரைந்து வளர்கிறது.

இதற்கெல்லாம் ஒரே தீர்வுதான் உண்டு: எல்லா மட்டங்களிலும், நமது மாநிலத்தில் தமிழே பயிற்று மொழியாக வேண்டும். அனைவருக்கும் ஆங்கிலம் ஒரு பாடமாக_ மொழியாக நன்கு கற்பிக்கப்பட வேண்டும். சில முதுநிலைப் படிப்புகளுக்கும், ஆய்வுப்படிப்புகளுக்கும் உடனடியாகத் தமிழைப் பயிற்று மொழியாகச் செய்ய இயலாதெனின் சிறிது காலத்திற்கு ஆங்கிலம் இருக்கலாம். தமிழோ ஆங்கிலமோ இரண்டில் எதை வேண்டுமானாலும் பயிற்று மொழியாகக் கொள்ளலாம் என்பது எந்த மட்டத்திலிருந்தாலும் தீமைதரும்.

நம்மைப் பொருத்த வரையில் எல்லா அலுவல்களும் தமிழிலேயே நடக்கவேண்டும், நடுவண் அரசாங்க அலுவல்கள் உட்பட. இந்தி மொழியாருக்கு இவ்வுரிமை கொடுக்கப்படும் பொழுது நமக்கும் அவ்வுரிமை கொடுக்கப்பட எவ்விதத் தடையும் இருக்க முடியாது.

பண்பாட்டின் தனிச் சிறப்பான ஊற்றுக்கோலாகவுள்ள மொழி, வாழ்க்கையின் எல்லாக் கூறுகளையும் வெகுவாகப் பாதிக்கிறது. அரசியல், நிருவாக, பொருளாதார, பண்பாட்டுத் துறைகளில் எதில் ஒன்றில் அஃது இரண்டாம் இடத்திற்குத் தள்ளப்பட்டாலும் நாளடைவில் அம்மொழியின் வளர்ச்சியும், அம்மொழியினரின் சம வாய்ப்பும், ஏற்றமும் தடைப்படும், உரிமை வாழ்வு பறி போகும். இத்தகைய தீங்கு வந்துறும் என்பதைக் கன்னடியரான திரு. கோகாவி என்ற கருநாடக மாநிலத்தார் ஒருவர் இவ்வாறு விளக்குகிறார்;

இந்தி ஏகாதிபத்தியத்தால் மொழிச் சதுர் வருணியம் ஏற்படும் அதாவது மொழியினடிப்படையில் நான்கு படிநிலைகளாக அமைந்த ஏற்றத் தாழ்வுகள் தோற்றுவிக்கப்படும். இந்தியைத் தாய் மொழியாகக் கொண்டவர்கள் அரசியல், நிருவாகத் துறைகளில் பிராமண நிலையையும், குஜராத்தியரும். மராத்தியரும் சத்திரிய நிலையையும், ஒரியா, பஞ்சாபி, வங்காளி முதலிய மொழியினர் வைசிய நிலையையும்,திராவிட மொழியினரான தென்னாட்டாரும், இந்தியாவின் வடகீழ் பகுதியில் வாழ்வோரும் சூத்திர நிலையையும் எய்துவர்.

மதத்தின் பெயரால் நுழைந்த வருணாசிரம முறையை, ஒட்டிய சனாதன தர்மத்தால் சுமார் மூவாயிரம் ஆண்டுக் காலம் அல்லல்படும் மக்கள் தொகை, மொழிச்சதுர் வருணியம் நுழைக்கப் படுவதால் உண்டாக்கப்படும் மேல்-கீழ் படிநிலை ஏறபாட்டால் மேலும் எத்தனைக் காலம் அடிமைப்பட்டு அழுந்த வேண்டி வருமோ எனநினைத்தாலே நெஞ்சாங் குலை குழுறுகிறது. மொழியுரிமைக் காப்பில் சஞ்சலமும் தயக்கமும் காட்டுவோமெனில் சமுதாய வீழ்ச்சிக்கு வழி வகுத்தவர்களாகிவிடுவோம். தமது பெருமை மிக்க எதிர்காலத்திற்கான அடித்தளத்தை இடுவதற்கு அறிவுத் தெளிவோடும் நெஞ்சத்துணிவோடும் விரைந்து செயலாற்ற வேண்டும். ★

# முதற்பதிப்பிற்கான முன்னுரை

உலகம் ஒன்றுபட்டுவரும் போக்கினைக் காண்கிறோம். பொருளாதாரச் சார்பும் (Economic inter-dependence) செய்திப்போக்கு வரத்தின் விரைவும், வானத்தை அளந்து நிற்கும் அறிவின் விரிவும், ஒற்றுமைக்கான புறநிலை-பொருள் மூலம் (Material basis)-கனிந்து வருவதைக் காட்டுகின்றன ஆனால் ஆதிக்க நோக்கும், சுரண்டல் போக்கும், சலுகைப் பிடிப்பும் உள்ளவரை மக்களிடையே நல்லெண்ணமும், பிணைப்பும் ஏற்படுதல் அரிது. மேற்கூறிய குறைகள் நீங்க வேண்டுமெனில் அச்சமும், அறியாமையும் அகலவேண்டும். உரிமை வேட்கையும், விழிப்புணர்வும், ஆழப்பதிய வேண்டும் பண்பு வளாவேண்டும். இத்தகைய உளநலமும் மனநிலையும் கைகூடிவரின் உலக ஒற்றுமைக்கான அகநிலை-ஆன்மீக அடிப்படை (Spiritual basis) அமைந்து விட்டதாகக் கூறலாம்

பண்புடையார் ஆதிக்கம் செலுத்த விழையார், விழிப்-புடையார் ஆதிக்கத்தை அனுமதியார். அத்தகைய சூழலில் ஒற்றுமை ஓங்கும். ஒற்றுமைக்காக மட்டுமல்ல மற்றவைக்கும் பண்பு தேவை. மனிதனின் தேவைகளைச் சரியாகப்பூர்த்தி செய்யவும், செய்தபின் ஓய்வினை முறையாகப் பயன்படுத்தவும் செம்மையான பண்பு வளரவேண்டும்.

பண்பு நலம் சிறப்பதற்கான மிக முக்கியத் தேவை மொழி வளம்-வளம் பெருக வளர்ச்சி வேண்டும். வளர்ச்சிக்கு உரிமை வேண்டும். உரிமை உறுதிப்பட சமவாய்ப்புத் தேவை.

இந்த உண்மைகளோடு, நிர்வாகத்திறன், அறிவு வளர்ச்சி ஆகிய தேவைகளையும் கருத்தில் கொண்டாற்றான் பல சமுதாயங்களை அல்லது தேசிய இனங்களை (Nationalities) உள்ளடக்கிய இந்தியக் கூட்டரசின் ஆட்சி மொழிக் கொள்கை பற்றி ஒரு சரியான முடிவுக்குவர இயலும்

இன்றைய ஏற்பாடு நலம் பயவாது. நாம் எதிர்ப்பது இந்தி ஏகாதிபத்தியத்தை (Hindi Imperialism); அந்த மொழியின் மீதோ, அதைப் பேசுவோர் மீதோ நமக்கு எவ்வித காழ்ப்பும் இல்லை நம்முடைய மொழியுரிமைப் போருக்கான நியாய அடிப்படைகளை விளக்குவதற்கும், இணைப்பு மொழி பற்றி நல்லதோர் முடிவுக்கு வரவும் இச் சிறு நூல் பயன்படுமெனக் கருதுகிறேன்.

— ஆசிரியன்

# 1. உரிமைக்குரல்

இந்தியத் துணைக் கண்டத்தின் பல்வேறு பகுதிகளையும் சார்ந்த எண்ணற்ற மக்களின் ஈகத்தால் 1947 இல் அரசியல் விடுதலை கிட்டியது. விடுதலையின் பயனை இந்தியத் தேசிய இனங்கள் அனைத்தும் சமமாக அனுபவிக்கவும், அவற்றின் தனித்தன்மைகள் காக்கப்படவும் தேவையான உரிமைகள் இருப்பின், ஆங்கிலேயர் காலத்தில் உருவான ஒற்றுமை நிலைப்பட்டு, நாட்டினர் நலவாழ்வை நோக்கி முன்னேற இயலும்,

சமூக நீதியும், பொருளாதார மேம்பாடும், பண்பாட்டுச் சிறப்பும் அடைவதற்கான சூழலையும், வாய்ப்பினையும் சமநிலையில் அனைவருக்கும் வழங்க வேண்டும் சுதந்திரப்போராட்ட காலத்தில் நாட்டுப் பற்றும், தியாக உள்ளமும் போதும்; இன்று அவற்றோடு பரந்த உள்ளமும் தெளிந்த அறிவும், தொலை நோக்கும், நியாயப் பார்வையும், திண்ணிய நெஞ்சும், துணிந்த செயலும் தேவை. அப்பொழுதுதான் இன்றைய நெருக்கடிகளை நாடு நல்ல முறையில் சமாளித்து, பீடு நடை போட்டு மேல் செல்ல இயலும்.

நாட்டின் நலத்தினை நாடி நிற்போர் பெரிய அளவில் தொல்லை தரும் மொழிச் சிக்கலைத் தீர்க்கவேண்டிய சோதனைக் கட்டத்தில் உளர். விருப்பு வெறுப்புகளுக்கும் அச்சத்திற்கும் ஆட்படாமல் நடுநிலை நோக்கில் முயன்று இதற்கொரு நேரிய தீர்வினைக்(solution) காண வேண்டும்.

சாதி, மதம், மொழி என்ற பெயரில் மக்களிடையே பிளவினை ஏற்படுத்திச் சமுதாயத்தைச் சீர்குலைக்கக் கூடாதென ''ஏகவசனத்தில்'' பேசுவது பேதமை. சாதி ஒழிக்கப்பட வேண்டியதொரு தீமை. மதம் தனிமனித வாழ்வோடு ஒடுங்கி நிற்க வேண்டிய ஒன்று. ஆனால் மொழி தனிமனிதனையும், சமுதாயத்தையும் உயர்த்தவல்ல ஓர் ஆன்மீகக்கருவி. அத்தகைய மொழியின் மேன்மையை அறியாது அதைச் சாதி, மதத்தோடு பிணைத்துப் பேசுவது மடமை.

மத்திய அரசின் ஆட்சிமொழி பற்றிய அரசியல் சட்டத்தின் 17-ம்பிரிவு இந்தி மொழியினர் அல்லாதாருக்குப் பெரும் அநீதி பயப்பதாக அமைந்துள்ளது. சட்டப்படி ஒருவருக்கு நிரந்தரச் சலுகையும், மற்றவருக்கு நிரந்தரத் தாழ்வும் தரப்பட்டிருப்பதை விழிப்புடையோர் ஏற்கமாட்டார்கள். ஏற்றத்தாழ்வுகள் நீங்கி, இந்தியத் தேசிய இனங்கள் அனைத்தும் சமநீதி பெற வேண்டுமென்பது நமது கோரிக்கை. அத்தகையதொரு நிலை ஏற்படும் வரை நாடு அமைதி காண்பது அரிது.

மேற்கூறிய அடிப்படைக் காரணம் மட்டுமன்றி மற்றோர் உண்மையையும் தமிழர்கள் நன்கு அறிந்திருப்பதால், மொழியுரிமைப் போராட்டத்தில் தமிழகம் ஒன்றேறனத் திரண்டுள்ளது. ஒரு சமுதாயத்தின் உயர்விற்கும், தாழ்விற்கும் பண்பாட்டுச் சிறப்பிற்கும் உரிமை வாழ்விற்கும் அடித்தளமாக அமைந்து நிற்பது மொழியின் வளமும் மேன்மையுமாகும். சமுதாயப் பிணைப்பினையும் தேசிய உணர்வினையும் ஏற்படுத்தும் காரணிகளுள் (factors), மொழி முக்கிய முதல் இடத்தைப் பெறுகிறது. தான் சார்ந்துள்ள சமுதாயத்தின் விலை மதிக்க முடியாத உடைமையாக அம்மக்களின் மொழி அமைந்துள்ளது. பேரரசுகளை இழக்கத் துணிந்தவர் கூடத் தங்கள் மொழியின் வளத்தையும், உரிமையையும் விட்டுக்கொடுக்க இசைவதில்லை. சமுதாயத்தின் முன்னேற்றம் மொழியின் வளத்

தையும் பொருத்தது; மொழியின் வளம் அதன் உரிமை நிலையைச் சார்ந்தது. ஆகையால்தான் இந்திய மொழிகள் அனைத்திடையும் சமத்துவம் நிலவும் ஓர் அமைப்பு ஏற்பட வேண்டும் எனத் தமிழகம் ஓயாது குரல் கொடுக்கிறது. ★



காட்டை அழிப்பது கூடும் — அலை
கடலையும் தூர்ப்பது கூடும் !
மேட்டை அகழ்வதும் கூடும் — விரி
விண்ணை அளப்பதும் கூடும் !
ஏட்டையும் நூலையும் தடுப்பது
கூடும் — உரிமை
எண்ணத்தை மாற்றுதல் எப்படிக்
கூடும் ?

—புரட்சிப் பாவேந்தர் பாரதிதாசன்

# 2. காந்தியடிகள் வகுத்த வழியாயிற்றே!

காந்தியடிகளின் நிறைந்த நல்லெண்ணத்தையும், தியாக வாழ்வையும் நாம் குறைகூற முடியாது; இருப்பினும் அவர் சமுதாய, அரசியல் பிரச்சனைகளை முற்றிலும் அறிவியல்கண் கொண்டு நோக்கவில்லை என்பதைக் குறிப்பிடத்தான் வேண்டும். இந்திய விடுதலைப் போராட்டத்திற்குத் தலைமை தாங்கி நடத்தி வந்த அண்ணல், குறிக்கோளுக்குத் தடையாக நின்ற இந்து-முசுலீம் வேற்றுமையைக் கண்டார். இந்த இரண்டு மதத்தினரிடையில் இருந்த வேற்றுமையைப் போக்க மொழியின் அடிப்படையில் ஒரு வழியைக் கண்டார். இந்துக்களின் பழைய நூல்களைக் கொண்ட மொழி சமற்கிருதம்; அதன் வழி வந்தது இந்தி; முசுலீம்கள் பெரும்பாலும் பாரசீக அதேபிய மொழிகளின் சார்புடைய உருது மொழியைப் பேசி வந்தனர்; இந்துக்களின் இந்தி, முசுலீம்களின் உருது ஆகியவற்றின் கலப்பே இந்துஸ்தானி; ஆகையால் இந்துஸ்தானி இந்தியாவின் பொதுமொழியானால் இந்து-முசுலீம் ஒற்றுமை நிலவும்; விடுதலைப் போர் விரைவு பெறும் என்று காந்தியடிகள் எண்ணினார்.

ஓர் ஐயம் எழும், விடுதலைப் போராட்ட காலத்தில் இந்தி மொழியினர் அல்லாதோரைக் காந்தியடிகள் ஏன் கருத்தில் கொள்ளவில்லை? இஃது ஒன்றும் விளங்காத புதிர் அல்ல. வேற்றுமையை-பிளவினை உண்டாக்கும் அளவிற்கு மற்ற மொழி பேசுவோர் தங்கள் தனி உரிமை

களை-மொழிகளின் தனித்தன்மைகளை வலியுறுத்த வில்லை; தாய் மொழிகள் இயற்கையாகப் பெறவேண்டிய தகுதிகள் ஓரளவிற்கு வலியுறுத்தப் பட்டன; அந்த அள விற்கு மொழிவழி மாநிலங்கள் அமைக்கப்பட வேண்டிய தன் தேவைஉணரப் பட்டது. மொழிவழித் தேசிய உணர்வு இன்று போல் அன்றும் வேகமுடையதாகஇருந்திருப்பின் இந்துஸ்தானியைப் பொது மொழியாக்குவதன் மூலம், விடுதலை இயக்கம் மேலும் சிதறுண்டு போகும் என்று அறிந்து, காந்தியடிகள் அதற்குச் தனித் சலுகை கொடுக்க முன் வந்திருக்க மாட்டார்.

ஆக, இந்துஸ்தானி இந்தியாவின் பொது மொழியாக வேண்டுமெனக் காந்தியடிகள் கருதியதற்கான அன்றைய சூழ்நிலை இன்றைய சூழ்நிலையிலிருந்து முற்றிலும் வேறுபட்டது.

மேலும் அவருடைய ''இந்தியாவின் பொது மொழி இந்துஸ்தானி'' என்ற தீர்வு(solution) கொண்டு இந்திய உபகண்டத்தினின்றும் பாகிஸ்தான் பிரிவதைத் தடுக்க முடியவில்லை. எப்படி முடியும்? மதவழித் தேசியத்தை வலியுறுத்திய ஜின்னாவிற்கும், அவரோடு முரண்கொண்டு நின்ற இந்துக்களுக்கும் மொழிவழித் தீர்வு எப்படிச் சமாதானமாகும்?

அதுமட்டுமல்ல; இந்திய விடுதலைக்குப் பின் இந்துஸ் தானி என்பதுபோய் இந்தி வந்துவிட்டது! இந்தநிலையில் காந்தியடிகள் வகுத்த வழி என்று சொல்வதில் என்ன பொருள் இருக்க முடியும்?

ஆக இந்தி ஏகாதிபத்திய முயற்சிக்கு காந்தியடிகளின் பெயரைப் பயன்படுத்துவது பெரும் மோசடியாகும். ★

''தமிழ்நாட்டில் இந்தியைப் புகுத்துவது ஆரியச் சூழ்ச்சி தானே ஒழிய வேறொன்றுமில்லை. சதிச் செயலுக்கு நாம் பணிந்துவிடக்கூடாது. போராடி வெற்றி காண்போம்.

— வி. பி. எஸ். மணி அவர்கள் - 1948

# 3. தமிழகம் தொடர்ந்து செல்லும்

இந்தி ஆதிக்கத்தை எதிர்க்கும் அறப்போரில் தமிழகம் முன் நிற்கிறது. இதில் அதற்கிருக்கும் துடிப்பும், வினயமும், செயல் ஆர்வமும் இந்தியாவின் மற்ற தேசிய இனங்களுக்கு இன்னும் வரவில்லை. இந்தியை எதிர்த்துத் தனித்தும் சிறந்தும் தமிழகம் விளங்குவது இயற்கையே; வரலாற்றுப் பின்னணியைக் கொண்டு நோக்கினால் இஃது எளிதில் புரியும்.

இந்திய மொழிக் குடும்பங்கள் இரண்டு. ஒன்று சமற்கிருத மொழிக் குடும்பம்; மற்றது திராவிட மொழிக் குடும்பம். இவ்விரண்டும், காலப்போக்கில் ஒன்றிலொன்று கலந்திருந்தாலும் ஒவ்வொன்றும் தனித் தன்மைகளும் அவற்றிற்கே உரிய சிறப்புகளும் கொண்டவை. தமிழகம், இடைக்காலத்தில் தமிழைவிடச் சமற்கிருதத்திற்கே அதிக முக்கியத்துவம் கொடுத்தது. கோயில்களில், மண விழாக்களில், இன்னும் இவை போன்ற வாழ்க்கையின் முக்கியக் கூறுகளில் தமிழை விடச் சமற்கிருதமே சிறப்பிடம் பெற்றது—போற்றப்பட்டது; இதனால் தமிழ் தாழ்ந்தது; இந்நிலை தொடர்ந்தது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதி, இருபதாம் நூற்றாண்டின் துவக்கம், இக்காலக் கட்டத்தில் தமிழுக்குரிய சிறப்பிடத்தைத் தமிழகத்தில் பெறவேண்டும் என்ற ஒரு விழிப் புணர்வு எழுந்தது. தொன்மையிலும், இலக்கிய வளத்திலும் தனித்தன்மையிலும், சமற்கிருதத்தோடு போட்டியிட்ட தமிழ், இன்னொரு வகையில் அதைவிடச்சிறந்திருந்தது. வடமொழி வழக்கொழிந்த வழங்கா மொழி. தமிழ் வழக்கிலிருக்கும்

வழங்கும் மொழி. வழக்கிலிருக்கும் மொழி, பண்டைச்சிறப் போடு புதுமை நலத்தையும் பெற்று, அதைப் பயன்படுத்தும் மக்களுக்கு நன்கு பயனளிக்க முடியும். தமிழைவிடச் சமற் கிருதம் என்றைக்கும் உயர்ந்ததென்ற ஒரு பொய்யான நம் பிக்கையின் அடிப்படையில் விளைந்தது, தமிழகத்தின் பண் பாட்டு அடிமைத்தனம். அடிமைத்தனத்தின் விளைவு வாழ்க் கையின் அனைத்துத் துறைகளிலும் தமிழ்மொழி பயின்றவன் பின்னடைந்து நின்ற நிலை. இந்தப் பிற்பட்ட நிலை மாற வேண்டும் என்ற புத்துணர்வு மேற்குறித்தபடி அண்மையில் தான் தோன்றியது. பண்டைத் தமிழ்க் காவியங்கள் உயிர் பெற்றெழ வேண்டும்; புதிய உண்மைகள் தமிழில் எழுதப்பட வேண்டும்; ''எங்கள் வாழ்வும், எங்கள் வளமும் மங்காத தமிழென்று சங்கே முழங்கு'', இப்படித் தாய் மொழியின் வளர்ச்சியில் தன்னை வளர்த்துக் கொள்ள வேண்டும் எனத் தமிழகம் உணர்ந்த காலம். அந்தக் காலத்தில் தான், 'இந்திய ஒற்றுமைக்கு ஒரு மொழி' என்ற போர் வையில் இந்தி நுழைந்தது. தமிழின் சிறப்பிடத்தைப் பறிக்க முயன்றது. நீண்ட இருளிலிருந்து மீள முயன்று கொண் டிருப்பவனை, மீண்டும் பண்பாட்டு அடிமைத் தனத்தோடு அரசியல் சமூகப் பொருளாதார அடிமையிருளிலும் ஆழ்த்தும் முயற்சியெனவே இந்தியின் நுழைவைத் தமிழகத்து அறிஞர் கணக்கிட்டனர். விழிப்பும், தன்மானமும் கொண்டவர் வெகுண்டனர், இந்தியத் தேசியக் காங்கிரஸ் இயக்கத்துக்கு ஆக்கம் நல்கி வந்த திரு. வி. க. , நாவலர் சோமசுந்தர பாரதி ஆகியோர், தங்கள் வழக்கமான போக்கினைத் துறந்து மொழி உரிமைக்கு வரிந்து கட்டி நின்றனர்.

இன்னொரு முக்கிய காரணமும் உண்டு. சமற்கிருதத் தைப் போற்றி வந்த பார்ப்பனர்கள் தமிழகத்து அரசியல், சமுதாயத் துறைகளில் முன்னின்ற காலம், உயரிய வாய்ப்புக் களைப் பார்ப்பனர் அல்லாதார் அடைய முடியாத நிலை; பெரும்பான்மையினரான அவர்களுடைய சமுதாயத் தன் மானத்திற்குச் சிறுபான்மையினராயிருந்த பார்ப்பனர் சவால் விட்டுக் கொண்டிருந்த போக்கு; அந்தப் போக்கு மாற

வேண்டும் எனப் பெரியார் ஈ. வெ. இராமசாமி அவர்கள் தலைமையில் சுயமரியாதை இயக்கம் செயல்பட்டுக் கொண் டிருந்த நிலை. இந்தக் கட்டத்தில் மேல்மட்டத்தில் இருந்த வேதியர் மட்டுமே அறிந்திருந்த சமற்கிருத மொழியறிவின் மூலம் இந்தியை எளிதில் கற்று என்றைக்கும் உயர்மட்டத் தில் பார்ப்பனர் அமர்ந்து விடுவர் என்ற அய்யமும், மற்றவர் என்றும் தாழ்ந்து நிற்பர் என்ற அச்சமும் உண்மையாகவே எழுந்தது இந்திக்கு எதிர்ப்புத் திரண்டது.

மேற்கூறிய இரண்டு போக்குகளின் காரணமாக இந்தி எதிர்ப்புணர்வு தமிழகத்தில் இரண்டாம் உலகப் போருக்கு முன்பே வேர் ஊன்றி வலிவு பெறத் தொடங்கியது. திரு. சி, இராசகோபாலாச்சாரி அவர்கள் 1938.ல் இந்தியைப் பள்ளி களில் கட்டாயமாகத் திணிக்க முற்பட்டபொழுது, அதை எதிர்த்துத் தமிழகம் போர்க்குரல் எழுப்பியது ; வெற்றியும் கண்டது. அதைத் தொடர்ந்து இந்திய விடுதலைக்குப் பின் பும் இந்தி ஆதிக்க எதிர்ப்பு அறப்போர் தமிழகத்தில் தொடர்ந்து நடந்து வருகிறது. திராவிடக் கழகம். திராவிட முன்னேற்றக் கழகம், கலைக்கப்பட்டுவிட்ட தமிழ்த் தேசியக் கட்சி; ஆகிய இயக்கங்கள் இந்தி ஆதிக்கத்தை அவ் வப்பொழுது எதிர்த்துக் கிளர்ச்சிகள் செய்தன. பிற்காலத்தில் திரு. இராசகோபாலாச்சாரி அவர்களும் இந்தி ஆதிக்க எதிர்ப் பணியில் சேர்ந்துகொண்டார். 1972 ல் தோற்றுவிக்கப்பட்ட அகில இந்திய அண்ணா திராவிட முன்னேற்றக்கழகம் இந்தி ஏகாதிபத்திய எதிர்ப்புக் கொள்கை கொண்டது. உலகத் தமிழ்க்கழகம் போன்ற அரசியல் சார்பற்ற இன மொழி இயக் கங்களும் மொழியுரிமை காக்கும் பணியில் முனைந்து நிற்கின் றன. மொழி உரிமை வேண்டும் என்ற விழிப்புணர்வு மங்க வில்லை. மேலும் மேலும் வளர்ந்து. வலிமை பெற்று வரு கிறது. தமிழகம் தன் குறிக்கோளில் தொடர்ந்து செல்லும் : அது தன் முயற்சியில் வெல்லும். ★

# 4. ஏனையோரும் நம் நெறியை ஏற்பர்

தமிழகத்தில் இந்தி ஆதிக்க எதிர்ப்பணி உருவாகிய சூழல் எதுவெனக் கண்டோம். மேற்கூறிய சூழல் மற்ற மாநிலங்களில் இல்லை. சமற்கிருதத்தை மற்ற மொழி பேசுவோர் வெறுக்காததுமட்டுமல்ல, அதன் மூலமே தங்கள் மொழிகள் வளர முடியும் என மற்ற மொழிகள் பேசுவோர் எண்ணினர். சமற்கிருதக் குடும்பத்தைச் சேர்ந்தவர் ஆயினும் சரி, திராவிட மொழிக் குடும்பத்தைச் சார்ந்த தமிழர் அல்லாத மற்றவர்களும் சரி, சமற்கிருதத்தை வைத்துத்தான் தங்கள் தங்கள் மொழிகளை வளமுடையதாக்க வேண்டும் என நம்பினர் சமற்கிருதத்தை முதன்மைப்படுத்துவதால் தாங்கள் தாழ்வோம் எனத் தமிழர் அல்லாத மற்றைய இந்தியர்கள் கருதவில்லை. ஆகையால், அத்தோடு தொடர்புடைய இந்தியின் நுழைவால் விளையும் ஆபத்தினை அவர்கள் **உடனடியாக உணரவில்லை**. மற்றும் பார்ப்பனர் அல்லாதார் இயக்கம் தமிழகத்தைப் போன்று மற்ற மாநிலங்களில் வலிமை பெற்றிருக்கவில்லை. இங்குபோன்று தனி இயக்கமாக வேறு இடங்களில் செயல்படவில்லை.

மேற்கூறிய காரணங்களால் இந்தி ஆதிக்க எதிர்ப்பு தமிழகத்தில் **உடனடியாகத் தோன்றி, வலிமை பெற்று வளர**, மற்ற மாநிலங்களில் அவ்வெதிர்ப்பு உடனடியாக எழவில்லை. இன்னும் முழுதுமாக உருவாகவில்லை. அப்படியானால், இந்தி ஆதிக்க எதிர்ப்பு தமிழ் நாட்டோடு நின்று விடுமா? மற்ற மாநிலங்களில் பரவுமா? இந்த நூற்றாண்டின் ஆரம்ப காலத்தில் தமிழகத்தில் இருந்த சூழல் இல்லாத இடங்களில் இந்தி எதிர்ப்புத் தோன்றா தல்லவா? என்பன போன்ற வினாக்கள்

எழலாம். உண்மை அதுவல்ல. மேற்கூறிய இரண்டு காரணங்களும், தமிழ்நாட்டில் இந்தி எதிர்ப்பு உடனடியாகத் தோன்றுவதற்கும், விரைவில் தீவிரமடைவதற்கும் ஆன காரணங்களே அன்றி, **இந்தி எதிர்ப்பிற்கான அடிப்படைக் காரணங்கள் அல்ல.** தமிழ் முன்னேற்றம் அடைய அடைய, சமற்கிருதத்தின் மீதான அச்சம் தணியும். பின்தங்கியவர் முன்னேற, முன்னேற, பார்ப்பனர் எதிர்ப்புணர்வு மங்கும். இந்தப் போக்குத் தொடர்ந்து, நாளடைவில் உலகத்து மொழிகளில் எதன் மீதும் அச்சம் கொள்ளாது, அனைத்து மொழிகள் மூலமும் நம் மொழியை வளமாக்கிக் கொள்ள முடியும் என்ற உணர்வு தலைதூக்கும். தன் நாட்டில், தாய் மொழியை விட மற்ற மொழிக்குத் தனிச் சிறப்பு என்ற நிலை மறைந்தவுடன் அம் மொழி மீதிருக்கும் அச்சமும் வெறுப்பும் போய்விடுகின்றன. இசை, இலக்கியம், சமயம் முதலிய பண்பாட்டுத் துறைகளில் தமிழ் தன் நியாயமான முதல் நிலையைப் பெற்றால், தமிழர்களிடையே வடமொழியின் மீதான வெறுப்பு மறைய வாய்ப்பிருக்கிறது. அதேபோன்று, சமற்கிருதப் பண்பாட்டுடன் இணைந்த வருண தருமம் ஒழிந்தால், தமிழ்ச் சமுதாயத்தில் **இனப்பிரிவுகள் நீங்கித்** தமிழ்த் தேசிய ஒற்றுமை உணர்வு மேலெழுந்து நிற்கும்.

இந்தி ஆதிக்க எதிர்ப்பு உணர்விற்கு **ஊட்டம் அளித்த ஆரம்பகாலப் பின்னணி தமிழகத்தில் மங்கி வந்தாலும், இந்தி ஆதிக்கத்திற்கு எதிர்ப்பு வளர்ந்தும் வலிமை பெற்றும்வரத்தான் செய்யும்.** இஃது எப்படி? இதற்கு விளக்கம் கண்டால், மற்ற இந்தி மொழி அல்லாத மாநிலங்களிலும் இந்தி ஆதிக்க எதிர்ப்பு, இன்று இல்லையேல் நாளை நிச்சயம் வளரும் என்பதை உணர்வோம்.

உரிமை வேட்கையும், விழிப்புணர்வும் உள்ள சமுதாயம், மேலாண்மை எந்த வடிவில் வந்தாலும் அதை எதிர்த்துப் போராடும். சமுதாய, அரசியல், பொருளாதார, இராணுவ ஆதிக்கங்களைப் போன்றே, கலாசார, மொழி ஆதிக்கங்களும் தீமை பயப்பன. மேலும், மொழி மேலாண்மை

பொருளாதார அரசியல் ஆதிக்கங்களுக்கும் வழிவகுக்கும் இந்த உண்மையை உணரும் கட்டத்தில் இந்தி மொழி பேசாத அனைத்து மாநில மக்களும், இந்தி மட்டும் மத்திய அரசின் ஆட்சி மொழி ஆகும் நிலையை எதிர்த்து நிற்பர், ஆதிக்க எதிர்ப்புணர்வும், பண்பாட்டு, மொழி பற்றிய உரிமை உணர்வுகளும், எக்காலத்திலும், எந்த மக்களிடையிலும் வேரூன்றி, வளர்ந்து, வலிமை பெறும் தன்மையின. அதற்காக மற்ற மாநிலத்தார் முற்றிலும் விழிப்படையட்டும் என நாம் காத்திருக்க வேண்டிய தில்லை.

இதுவரை, தமிழகம் இந்தி ஆதிக்க எதிர்ப்பில் முன் நிற்பதற்கான கடந்த காலச் சூழ்நிலையையும், அவ்வெதிர்ப்புணர்வு மற்ற இந்தி மொழி பேசாதோரிடை யும் பரவுவதற்கான வாய்ப்பினையும் கண்டோம். இனி இன்றைய ஆட்சி மொழிச் சட்டத்தினால், இந்தி ஆதிக்கம் ஏற்படுமா, அவ்வாறு அவ்வாதிக்கம் ஏற்பட அனுமதிப்பது முறையா, நலமா என்பதைப் பார்ப்போம். ★

"நான் ஒரு முஸ்லீமே ஆனாலும் நானும் தமிழன் தான். தமிழ்க் கலாசாரம் எவராலும், எதனாலும் அழிக்க முடியாத ஒன்று... அதைக் கெடுக்கத் தான் ஆட்சியாளர்கள் இந்தியைக் கொண்டு வந்து இந் நாட்டில் நுழைக்கிறார்கள்.... இதைத் தடுக்க இந் நாட்டில் வாழும் கிருஸ்துவர்களும் முஸ்லீம்களும் மற்றும் எல்லோரும் கடமைப்பட்டவர்களேயாவார்கள், ஏன்? இவர்கள் யாவரும் தமிழர்கள்." — அப்துல் மஜீத் — *1948.*

# 5. குடியரசைக் குழியில் தள்ளும் அரசியல் சட்டப் பிரிவு

இந்திய அரசியல் சட்டம் (The constitution of India இந்திய மக்களின் பிரதிநிதிகளால் வகுக்கப்பட்ட ஒன்று எனக் கூறப்படுகிறது; ஆனால் ஓர் உண்மையை மனதில் கொள்ளவேண்டும். அரசியல் சட்டத்தை வகுத்த அரசியல் நிர்ணய சபை உறுப்பினர்கள், தற்போதுள்ளதுபோல் இருபத்தொரு வயதிற்கு மேற்பட்ட ஆண், பெண் அனைவராலும் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் அல்ல. சொத்து, தொழில், சமயம் ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்த வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்

எது எப்படியாயினும் 1950, சனவரி 26-ஆம் நாள் முதல் நம் ஆட்சி முறைக்கு அடிப்படையாக அமைந்துள்ள அரசியல் சட்டத்தின் ஆட்சி மொழிப் பிரிவு குடியரசு முறைக்கு முரண்பட்டது. இந்திய அரசியல் சட்டத்தின் 17-ஆம் பகுதி ( PART XVII ) மத்திய அரசின் ஆட்சி மொழி பற்றிப் பேசுகிறது. தேவனாகரி எழுத்துக்களால் எழுதப்படும் இந்தி இந்தியாவின் மத்திய ஆட்சி மொழியாகும். (Article 343-The official language of the union shall be Hindi in Devanagiri script).

இந்தியா பல மொழிகள் பேசும் மக்களைக் கொண்ட நாடு இங்கு உண்மையான மக்களாட்சி நடைபெறவேண்டுமெனில் வேறுபட்ட மொழிகள் பேசும் இந்தியத் தேசிய இனங்கள் அனைத்திற்கும் சம வாய்ப்பு, எல்லாத் துறைகளிலும் அளிக்கப்படவேண்டும். ஆனால் இந்திய அரசியல் சட்டமோ இந்திமொழிக்குமட்டும் மற்றமொழிகளைவிடத் தனி நிலையை நல்கி, அம்மொழியாருக்குச் சலுகை காட்டுகிறது.

சமத்துவத்தைப் புறக்கணித்துச் சலுகை காட்டும் எந்த அரசியல் கோட்பாடும் குடியரசு முறைக்கு முரணாகும். மேற்கூறிய இந்திய ஆட்சிமொழிபற்றிக் கூறும் 17-ஆம் பகுதி இந்தி பேசாத மக்களுக்கு மொழியின் அடிப்படையில் சம வாய்ப்பினை அளிக்கவில்லை. இக்காரணத்தால் இந்தி மொழியினரல்லாதவர் இரண்டாந்தர மக்கள் ஆகின்றனர்.

அதுமட்டுமல்ல; அடிப்படை உரிமைகளை (Fundamental rights) அளிக்கும் அரசியல் சட்டப்பிரிவுகளில் (Articles) **வேலை வாய்ப்பு விஷயத்தில்** மொழிச் சமத்துவத்தை வலியுறுத்துவதில்லை. கல்வி, பண்பாட்டு உரிமைகளை (Cultural and Educational rights) நல்கும் சரத்துக்கள் சமய, இன, சாதி சமத்துவங்களோடு மொழிச் சமத்துவத்தையும் வலியுறுத்துகின்றன. உதாரணமாக அரசியல் சட்டத்தில் 29[2]-ஆம் உட்பிரிவு இப்படிச் சொல்கிறதும் அரசாங்கத்தாலோ அல்லது அரசாங்கத்தின் பண உதவியாலோ நடத்தப்படும் எந்தக்கல்வி நிறுவனமும் சாதி, சமய, இன, மொழியின் காரணமாக எந்தக் குடிமகனையும் சேர்த்துக் கொள்ள மறுக்கக் கூடாது. (No citizen, shall be denied admission into any educationa, institution maintained by the state or receiving state aid out of state funds on grounds only of religion race, caste, language or any of them).

மேற்கூறிய பிரிவு, மொழிச்சமத்துவத்தையும் சேர்த்து வலியுறுத்துகிறது. **ஆனால் சரத்து [ 16 ] 2 என்ன சொல்லுகிறதென்பதைப் பார்ப்போம்;** சமயம், இனம், சாதி, பால், பாரம்பரியம், பிறப்பிடம், குடியிருக்குமிடம், ஆகியவற்றின் அடிப்படையில் எந்தக் குடிமகனையும் அரசாங்க வேலைக்கோ அல்லது அலுவலுக்கோ தகுதியில்லையெனக் கூறுவதோ அல்லது சம வாய்ப்பினை அளிக்க மறுப்பதோ கூடாது. (No citizen shall on grounds

only of religion, race, caste, sex, descent, place of birth, residence or any of them, be ineligible for or discriminated against in respect of any employment or office under the state). இங்கு அரசு (state) என்ற சொல் மத்திய அரசையும், மாநில அரசையும், மற்ற சுய ஆட்சி மன்றங்களையும் கூடக் குறிக்கும். இந்தச் சரத்து மற்ற சமத்துவங்களோடு மொழிச் சமத்துவத்தை நல்க வில்லை. வேண்டுமென்றே அதை விட்டு விட்டார்கள்.

மொழியின் அடிப்படையில் அமைந்த மாநில அரசுகள் அந்தந்த மாநிலங்களில் வழங்கும் தேசிய மொழியை அறிந்திருந்தால்தான் வேலை வாய்ப்பு எனக் கூறினால், அதில் நியாயம் இருக்க முடியும். ஆனால் எல்லா மாநிலங் களையும் அல்லது தேசிய இனங்களையும் உள்ளடக்கி யுள்ள மத்திய அரசு, மொழியின் அடிப்படையில் சமத்துவம் அளிக்க மறுப்பதேன்? மத்திய அரசாங்க வேலை வாய்ப்புகளில் இந்தி மொழி அறிந்தோருக்குச் சலுகை காட்ட வேண்டும் என்ற குறிக்கோளில் மேற்கூறிய சரத்தில் மொழி பற்றிய குறிப்பு விடப்பட்டிருக்கிறது என்பது தெளிவு. **இந்திய அரசியல் சட்டத்தின் அடிப்படை உரிமைகள் பற்றிப் பேசும் சரத்துக்களே இவ்வண்ணம் இந்தி பேசாத மக்களுக்குக்கேடு விளைவிக்கின்றன.**

கல்வி, பண்பாட்டுத் துறைகளைப் போன்றே அரசியல் அலுவலகத் துறைகளிலும் மொழி உரிமையும் சமத்துவமும் நிலைநாட்டப்பட வேண்டும். அப்பொழுது தான் இந்தி மொழி பேசாத சமுதாயங்கள் முழு உரிமை களையும் அடைந்ததாகக் கொள்ளமுடியும்; அதுவரை அவர்கள் இரண்டாந்தர மக்களே! மொழி காரணமாக அலுவலக வேலை வாய்ப்புகளில் சம வாய்ப்பை - சம உரிமையை இழந்து நிற்கும் இந்தி பேசாத மக்கள் நாளடைவில் பொருளாதார, பண்பாட்டு உரிமைகளை யும் இழப்பர், இஃது உறுதி. ஆகையாற்றான் ஆட்சி மொழி

யைப் பொருத்தவரையில் இந்திய அரசியல் சட்டம் முறையாகத் திருத்தப்படவேண்டுமெனக் கூறுகிறோம். அப்படித் திருத்தப்படும் வரை அது குடியரசிற்கே முரண்பட்ட பகுதிகளைக் கொண்ட ஒரு சட்டம் என்றே கொள்ளப்பட வேண்டும். இன்றைய நிலையில், இந்திய அரசியல் சட்டம் இந்தி பேசாத மக்களை மொழியின் அடிப்படையில் இரண்டாந்தரக் குடிமக்கள் ஆக்குவதன் மூலம் மக்களாட்சியின் மூலக்கூறான சமத்துவத்தைப் புறக்கணித்து நிற்கிறது. ★

''இந் நாட்டில் இந்தியைப் புகுத்தி நம்மைக் கெடுக்க, நமது கலா சாரத்தை அழிக்க, நமது புத்துணர்ச்சியை ஒழிக்க, ஆரியர் கங்கணம் கட்டிக்கொண்டு அல்லும் பகலும் உழைத்து வருகிறார்கள் .... .... இதை ஆரம்பத்திலிருந்தே உணர்ந்து கொண்டுள்ள பெரியார் இராமசாமி அவர்களும் ஆரியத்தை இந்நாட்டிலிருந்து எவ்வகையிலேனும் ஒழித்தே தீருவதென்று கங்கணம் கட்டிக்கொண்டு முயற்சி செய்து வருகிறார்கள்.''

— மறைமலையடிகளார் — 1948

''ஆங்கிலம் இந்நாட்டு மக்களுக்கு அயல்மொழியெனில், அதைப் போலவே தமிழர்க்கு இந்தியும் அயல் மொழியே யாகும். ஆங்கிலம் நமக்கு அயல் மொழியே எனினும், ஆக்கிலேயர் ஆட்சி இங்கு இன்மையால், அம் மொழி மூலம் ஆதிக்கம் செலுத்த முற்படுவோர் இங்கு இன்மையால், ஆங்கிலம் ஆட்சிமொழியாக இருப்பதால் இந்நாட்டு மக்கள் எவர்க்கும் அதனால் தீமை ஒன்றும் இல்லை. ஆங்கிலம் இந்நாட்டு மக்கள் எல்லோருக்கும் அயல் மொழியேயாதலால் ஒப்பக் கற்று ஒரு நிகராக வாழலாம்.''

—புலவர் குழந்தை-நூல்— ''இந்தி ஆட்சி மொழி ஆனால்''

## 6. ஒற்றுமைக்கு ஒரு மொழியாம்!

அரசியல் சட்டத்தை வகுத்தவர்கள் அறிஞர்கள் ஆயிற்றே, அவர்களுக்கு ஏன் '' மக்கள் நாயகத்திற்குப் புறம்பான பகுதிகள்'' என, மேற்கூறிய பிரிவு, அல்லது சரத்துக்கள் தோன்றவில்லை? நிச்சயம் தோன்றியிருக்கிறது; தோன்றிய காரணத்தால் அதை எதிர்த்தவர்களும் இருந்தார்கள். முன்னாள் நிதி அமைச்சர் திரு. டி. டி. கிருஷ்ணமாச்சாரி அவர்கள் கூட இந்தி ஆட்சி மொழியாக ஆவதன் மூலம் இந்தி ஏகாதிபத்தியம் ஏற்படும் என அரசியல் நிர்ணய சபையில் எச்சரித்துள்ளார். பெருந்தகை டி. ஏ. இராமலிங்கம் செட்டியார் தெளிவாகவே இந்தி ஆதிக்கப் போக்கை எதிர்த்தார். இந்தியாவின் அலுவல் மொழியாகும் உரிமை, தகுதியின் அடிப்படையில் தமிழுக்கே உண்டு என காயிதே மில்லத் இசுமாயில் முழங்கினார்.

தங்கள் மொழி அகில இந்தியாவின் ஆட்சிமொழி ஆகிறதென்ற ஆர்வத்தில் இந்தி மொழியாளர்கள் மற்றவர்களுக்குத் தாம் இழைக்கும் அநீதியை மறந்தனர். இந்தி மொழியினர் அல்லாதவர்கள் அனைவரும் அதனால் வரும் கேட்டின் சூட்டினை அன்று முறையாக உணரவில்லை, உணர்ந்தவர்கள் கூட அதைத் தீவிரமாகவும், ஒருமுகமாகவும் எதிர்க்கவில்லை என்றுதான் கூறவேண்டும். ஏன் அப்படி?

இந்தி மொழி பேசுவோர், பேசாதோர் அனைவருமே நாட்டு ஒற்றுமைக்கு ஒரு மொழி வேண்டும் எனக்கருதியிருந்தனர். ஆகையால் மக்கள்நாயகம், சமத்துவம் ஆகிய

விழுமிய கோட்பாட்டுகளை காற்றில் விட்டு "இந்தி என்ற ஒரு மொழி வைத்து ஒற்றுமையைக் காப்போம்" எனக் கண்மூடி நின்றனர்.

உண்மையில் ஒரு நாடு என்றால், அதற்கு ஒரே மய்ய ஆட்சி மொழிதான் இருக்கவேண்டுமென்றோ, ஒரே தேசிய மொழிதான் இருக்க வேண்டுமென்றோ இல்லை, எடுத்துக் காட்டாக, சுவிட்சர்லாந்தில் ஜெர்மன், ஃப்ரென்சு, இத்தாலி ஆகிய மூன்று மொழிகள், சம வாய்ப்புடைய அரசியல் மொழிகள்; அவைகளோடு இன்று ஒரு விழுக்காடு (1%) மக்களால் பேசப்படும் ரோமனிசு என்ற மொழியும் தேசிய மொழியாக்கப்பட்டிருக்கிறது. அங்கென்ன ஒற்றுமை மாண்டுவிட்டதா? அதேபோல் ஃபின்லாந்தில் மிகச் சிறு பான்மை மக்களால் பேசப்படும் ஸ்வீடிஷ் மொழிக்கு ஃபின்னிஸ் மொழியோடு சமவாய்ப்பு அளிக்கப்பட்டுள்ளது. பெல்ஜியத்தில் இதே போன்ற நிலை. தமிழுக்கும் சிங்களத்திற்கும் சமநிலை அளிக்கும்படியான மெய்க்கூட்டரசை நிறுவுவதன் மூலம் இலங்கையின் இனச் சிக்கலைத் தீர்க்க சிங்கள வெறியர்கள் முன்வராத காரணத்தால், ஈழ விடுதலை இயக்கம் தோன்றியது. உண்மையான குடியாட்சி நிலவ வேண்டுமானால் அரசியல் உரிமையோடு, மொழி, பண்பாட்டு உரிமையும் தேவை என்பதை மேல்நாட்டினர் உணர்ந்திருக்கிறார்கள். அதற்கு ஏற்ப அவர்தம் அரசியல் சட்டமும் வகுக்கப்பட்டிருக்கிறது; ஆகையால் எவ்விதப் பூசலும், போட்டியும், அச்சமும், வெறுப்பும், குழப்பமும் இன்றி செவ்வனே அவர்தம் அரசு இயங்குகிறது. **அமைதியான சூழலில் பொருளாதார முன்னேற்றத்திற்கான பணிகள் ஆங்கு தொடர்ந்து நடக்கின்றன. அதற்கு மாறாக இங்கு அடிப்படை உரிமைகள் மறுக்கப்படுவதால் போர் ஓயவில்லை; குழப்பம் தீரவில்லை;** பொருளாதாரத் துறையில் முன்னேற்றமும், சமத்துவமும் அடையவேண்டும் என்ற குறிக்கோளைக் கூட இன்றைய இந்தியச் சூழல் "முனை மழுங்க" வைத்து விட்டது வருந்தத்தக்க ஒன்றே. நிற வெறி தாண்டவமாடும்

தென் ஆப்பிரிக்காவில் கூட ஆங்கிலமும், ஆஃப்பிரிக்கானசு மொழியும் சமத்துவ நிலையைப் பெற்றுள்ளன; மொழி விஷயத்தில் அவர்களுக்கு இருக்கும் விவேகம் கூட இங்கு உள்ளோர்க்கு இல்லையெனில், அது வெட்கம்! ஒரு நாடாக ஒன்றுபட்டு வாழ்வோர் எல்லாம் ஒரே தேசிய ஆட்சி மொழியைக் கொண்டிருக்கவில்லை என இதுவரை கண்டோம்,

சோவியத் நாட்டில் (U. S. S. R.) உருசிய மொழி பொது மொழியாக இருப்பதை உதாரணம் காட்டி, அதே போன்று நாமும் இந்தியைப் பொது மொழியாக ஏற்க வேண்டும் எனச் சொல்வார் உளர். ஒர் உண்மையை அவர்கள் காணவேண்டும் ஜார் மன்னர்கள் ஆண்ட காலத்திலேயே அவர்கள் அடக்கி ஆண்ட உருசியரல்லாத மற்றத் தேசிய இனங்களின் மீது உருசிய மொழியைத் திணித்தனர். இந்தியா விடுதலை பெற்றபொழுது எப்படி இந்தியா முழுமையும் ஆங்கிலம் பொது மொழியாக இருந்ததோ, அதே போன்று கம்யூனிசப் புரட்சியின்பொழுது உருசிய மொழி சோவியத் நாட்டின் பொது மொழியாக இருந்தது. எழுத்துக்களோ. சிறந்த இலக்கியங்களோ இல்லாத சில மொழிகளைக் கூடத் தேசிய மொழியாக ஏற்று வளர்த்த பெருமை லெனின் அவர்களைச் சாரும். மேலும் ஒன்றைக் கவனிக்க வேண்டும். சோவியத் நாட்டு மொழிகள் அனைத்திலும் முன்னேறிய வளம் மிக்கதாக உருசிய மொழி அமைந்திருந்தது. இந்திய மொழிகளின் வளர்ச்சிக்கு ஆங்கிலம் எப்படிப் பயன் பட்டதோ — பயன்படுகிறதோ — அவ்வண்ணமே சோவியத் நாட்டின் பிறமொழிகள் முன்னேற்றத்திற்கு உருசிய மொழி உதவுகிறது.

அதேபோன்று, ஒரு மொழி பேசுவோர் ஒரே நாடாக வாழ்வதில்லை. கானடாவில் வாழும் ஆங்கிலேயர் அனைவரும், அமெரிக்காவில் ஆங்கிலம் வழங்கப்படுகிறதென்பதற்காக அதனோடு சேரத் துடிக்கவில்லை. அதேபோன்று

அமெரிக்காவும், இங்கிலாந்தும் ஒரே மொழியைக் கொண்டிருக்கும் காரணத்தால் ஒன்றுபட்டு ஒரே நாடாக நிற்கவில்லை, தென் அமெரிக்க நாடுகளில் முக்கியமாக, பிரேஜில் தவிர, மற்றவை ஸ்பானிய மொழி பேசும் நாடுகள். அவைகள் ஒரே நாடென ஒன்றுபடவில்லையே! உண்மை இதுதான், சமுதாய அமைப்பிற்குக் குடும்பம் இயற்கையான அடிப்படை அலகாக (unit) அமைந்துள்ளது போன்று. அரசியல் அமைப்பிற்கு தேசியம் இயற்கையான அடிப்படை அலகு ஆகும். எத்த ஒரு மக்கட் பிரிவினர் வரலாற்றுப் பின்னணியில் **ஒற்றுமை உணர்வினை இயற்கையாக வளர்த்துக் கொள்கின்றனரோ**, அவர்கள் தனித்த தேசியம் ஆகின்றனர். மொழி, சமயம், பண்பாடு, பழக்க வழக்கங்கள், மரபுப்போக்குகள், வரலாறு ஆகிய கூறுகள் அனைத்துமோ அல்லது சிலவோ சேர்ந்து தேசிய **உணர்வினை** உருவாக்கும், ஒரு நாடாகலாம்; அதை தேசிய நாடு (Nation State) என்பர். இங்கிலாந்து. ஃபிரான்சு, ஸ்பெயின், ஆப்ஃகானிஸ்தான் ஜப்பான் ஆகிய நாடுகள் இவ்வடிப்படையில் உருவானவையே. இனி. பொருள் வளத்தைப் பெருக்கவும், பாதுகாப்பை உறுதிப்படுத்தவும், பண்பாட்டு உறவுகளை எளிதாக்கவும், விரிவாக்கவும், ஒன்றிற்கு மேற்பட்ட தேசியங்கள் சேர்ந்து ஒரு நாடாக அமையலாம். அவ்விதம் அமைக்கப்பட்ட நாடு, பல தேசியங்களைக் கொண்ட நாடு (Multinational State) எனப்படும். அத்தகைய வேறுபட்ட தேசியங்களை உள்ளடக்கியுள்ள நாட்டு அமைப்பு, **அறிவின் அடிப்படையில் மக்களின் விருப்பத்தின்** மூலம் எழுந்த ஒன்றாகும். ஐக்கிய அமெரிக்கா, சோவியத் நாடு ஆகியவை இந்த அடிப்படையில் உருவானவையே இந்தியாவும் வேறுபட்ட தேசிய இனங்களைக் கொண்ட ஒரு நாடு. இதன் ஒற்றுமை இந்தியத் தேசிய இனங்களின் விருப்பத்தின் அடிப்படையில் அமையவேண்டுமேயன்றி ஒரே மொழி, ஒரே மதம், ஒரே பண்பாடு என்ற போக்குகள் மூலம் அல்ல; அத்தகைய போக்குகளை ஆதரிப்போர் ஒற்றுமையின் பகைவர்கள்.

# 7. வேற்றுமையில் ஒற்றுமை

'அந்தந்த மாநிலங்களில் மாநில மொழிகள் ஆட்சிமொழிகளாக இருக்கும்; அவற்றை ஒட்டிய பண்பாடுகள் வளரும்; மத்திய ஆட்சி மொழியாக இந்தி வேண்டும் என்கிறோம். இதில் யாருக்கும் இன்னலோ இழப்போ இருக்க முடியாதே!' இஃது இந்தி மொழி வெறியர்களும், அவருக்குத் துணை நிற்கும் பதவிப் பித்தர்களும், ஏமாளிகளும் கூறும் கூற்றாகும்

"இந்தியா பல மொழிகள் பேசும் மக்களைக் கொண்ட நாடு. அந்தந்த மொழி பேசுவோருக்குத் தனி மாநிலங்கள், தனிப் பண்பாடுகள், தனி உரிமைகள் உண்டு. இந்திய அரசியல் சட்டம் இந்த உண்மையை ஏற்றுக்கொள்கிறது. வேறுபட்ட பண்பாடுகளைக் காப்பாற்றுவதற்கும், அவற்றின் உரிமைகளை நிலை நாட்டுவதற்கும் ஏதுவாக இந்திய அரசியல் சட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது; அதோடு வேற்றுமையில் ஒற்றுமை காண்பதற்கான வழியும் அதில் வகுக்கப்பட்டிருக்கிறது. அதுதான்—அகில இந்தியத் தொடர்பிற்கு இந்தி என்றும், அந்தந்த மாநிலங்களில் அவ்வவற்றின் மொழிகள் என்றும் வகுக்கப்பட்டிருக்கும் ஏற்பாடு."

மேற்கண்ட வாதத்தை அகில இந்திய அடிப்படையில் இயங்கும் கட்சிகள் தங்கள் மொழிக் கொள்கைக்கான அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. மத்திய — மாநில அரசுகளின் மட்டத்தில் எந்த அளவிற்கு எந்த மொழி பயன்படுத்தப்படவேண்டும் என்பதிலும், நீதி, நிர்வாகம், சட்டசபை, கல்வி ஆகிய துறைகளில் எந்தக் கட்டத்தில்

எந்த மொழி பயன்படுத்தப்படவேண்டும் என்பதிலும், இதுபோன்ற நடைமுறை விஷயங்களிலும் இப்பொழுதைய அகில இந்தியக் கட்சிகள் தங்களுக்குள் வேற்றுமைகள் காட்டுகின்றன. அதோடு, இந்தியைக் கற்றுக் கொள்வதற்கான காலக்கெடு கேட்டுக் கெஞ்சுவதிலேயும் அவைகளுக்குள் வேற்றுமையுண்டு.

அகில இந்தியக் கட்சிகள் அனைத்துமே ஒரு கொள்கையை வலியுறுத்துகின்றன என்பதால், அக்கொள்கை நியாயமான—சரியான ஒன்றாக ஆக முடியாது. அக்கட்சிகள் தங்களுடைய மொழிக் கொள்கையை அவசியம் மாற்றிக் கொள்ள வேண்டிய கட்டாயம் வந்தே தீரும்; மாற்றிக் கொண்டால்தான் அகில இந்திய அளவில் அவற்றிற்குச் செல்வாக்கு இருக்க முடியும்; அகில இந்தியா என்ற அமைப்பைக் காப்பாற்றுவதற்கேனும் அவை தங்களுடைய மொழிக் கொள்கையை மாற்றித்தான் ஆகவேண்டும்.

இனி. இதைப்பற்றிச் சற்று விளக்கமாகக் காண்போம்: "இந்தியாவின் அரசியல், நிர்வாக ஒருமை காப்பாற்றப் படுவதற்கு, ஒரு பொதுமொழி தேவை. அத்தகைய மொழி ஓர் இந்திய மொழியாகத்தான் இருக்க வேண்டும். அப்பொழுது தான் அதன் தேசியத் தன்மானம் காப்பற்றப்படும் ஆகையால் இந்தியாவில் பெரும்பான்மை மக்களால் பேசப்படும் மொழியான இந்தி, இந்தியாவின் பொதுமொழி—தேசிய மொழி—என்ற தகுதியைப் பெறவேண்டும். மற்ற மொழிகள் அந்தந்த மாநிலங்களோடு அடங்கியிருக்க வேண்டும்."

மேற்கண்ட "நியாயத்தை" திரும்பத் திரும்பச் சொல்வதில் அகில இந்தியக் கட்சிகளுக்கு எவ்வளவு ஆர்வம்! அதையே அழுத்தி உரத்த குரலில் பேசுவதில் அவர்களுக்கு எவ்வளவு தீவிரம்!! யாரேனும், "என் மொழி நலமும், உரிமையும் புறக்கணிக்கப்படும்," என

முணு முணுத்தால் போதும், அவருக்குக் கிடைக்கும் பட்டப்பெயர்கள் — ''மொழி வெறியன், குறுகிய உள்ளங் கொண்டோன், நாட்டின் ஒற்றுமையைக் குலைப்போன், அமைதியைக் கலைப்போன், பெரிய பொருளாதார, பாதுகாப்பு நலங்களில் சிந்தையைச் செலவிடாமல் சிறியதைப் பெரிதாக்கும் சிறியோன்'' — இவைபோன்று இன்னும் பல. இந்தி மொழி, இந்து மதம், வடபுலத்தரகு முதலாளியம் முதலிய ஆதிக்க வாதிகள், மொழி உரிமைப் போரில் ஈடுபட்டுள்ளவர்களைப் பழித்துக் கூற முற்பட்டுள்ளது விந்தையே!

இந்தி மட்டுமே இந்தியாவின் தேசிய மொழி எனக் கூறுவோர் அறிவுக் குருடர்கள். மலையாளம், தமிழ், கன்னடம், தெலுங்கு, மராத்தி, குஜராத்தி, ஒரியா, வங்காளி, இந்தி, பஞ்சாபி, காஷ்மீரி, அஸ்ஸாமி, உருது, சிந்தி, சமற்கிருதம் ஆகிய அனைத்துமே இந்தியாவின் தேசிய மொழிகள் தான். இன்னும் கொங்கனி, ஆங்கிலம் முதலிய மொழிகளையும். இந்தியத் தேசிய மொழிகள் என ஏற்றுக்கொள்ளவேண்டும். இத்தனைத் தேசிய மொழிகள் இருக்கும் பொழுது, இந்தியாவிற்கு தேசிய மொழியே இல்லாதது போன்று கருதி, அந்த இடத்தை இந்திக்குக் கொடுக்க முயல்வது ஏனோ?

இந்திமொழியரல்லாத மற்றவரைச் சரிக்கட்டுவதில் ''கெட்டிக்காரத்தனம்'' காட்டும் சிலர் இப்பொழுது, 'இந்தி மட்டுமே தேசிய மொழியல்லவென்றும், மற்றவையும் தேசிய மொழிகளே என்றும் சொல்லுமளவிற்குப் ''பெரிய மனது'' காட்டுகிறர்கள்; ஆனால் இப்படி ஒரு வாதத்தைக் கிளப்புகிறார்கள்; நாம் வெளி நாட்டில் இருக்கும் பொழுது நம் நாட்டு மொழியில் பேசாமல், ஆங்கில மொழியில் பேசினால், ''உனக்கென்று ஒரு தேசிய மொழி இல்லையா'' எனக்கேட்கிறார்கள். அதற்காகவேனும் ஒரு பொது மொழியை நாம்

தேர்ந்தெடுக்கவேண்டும் எனச் சாமர்த்தியம் பேசிச் சப்பைக்கட்டுப் போடுகிறார்கள்.

''எங்கள் நாட்டில் ஒரு தேசிய மொழியென்ன, பல தேசிய மொழிகள் உள, அவற்றுள் ஒன்றில் நான் பேசுகிறேன்'' எனச் சொல்லி அவரவர்கள் தாய்மொழியிலேயே பேசலாமே? இந்தி மொழிப் பேச்சை மொழி பெயர்க்க வெளி நாட்டில் ஆட்கள் கிடைக்கும் பொழுது தமிழ், மலையாளம், வங்காளி, போன்ற மொழிகளை மொழி பெயர்க்க ஆட்கள் இல்லாமலா போய்விடுவார்கள்? ஆக அந்நியர் முன்னிலையிலும், நமக்கு ஒரு மொழி தான் தேசிய மொழி எனச் சொல்லிக் கொள்வதை விட, இந்தியா பல தேசிய மொழிகளைக் கொண்ட நாடு எனச் சொல்லிக்கொள்வதில்தான் பெருமை.

சரி, வெளிநாட்டிற்குச் சென்றால் நம் தாய் மொழியிலேயே பேசிவிட்டு வந்து விடுகிறோம். ஆனால், அயல் நாட்டு விவகாரங்களில் தொடர்பு கொள்வதும், உள் நாட்டு நிர்வாகத்தை நடத்துவதும் வெறும் ''பேச்சில்'' முடிபவை அல்லவே! நிலமைகள், கருத்துக்கள், முடிவுகள், ஆணைகள் முதலியவை எழுதப்பட்டு, காகிதங்கள் கட்டுக்கட்டாக ஓரிடத்திலிருந்து மற்ற இடத்திற்கு அனுப்பப்பட வேண்டுமே; அதையென்ன இந்தியத் தேசிய மொழிகள் அனைத்தின் மூலமாகவா செய்ய முடியும்? அதற்கு ஒரு மொழியைத் தேர்ந்தெடுக்கத் தானே வேண்டும்? அந்த மொழி இந்தியாக இருக்கட்டுமே என வாதிக்கலாம்.

இருக்கின்ற ஆங்கிலத்தை நீக்கி விட்டு, புதிதாக இந்திக்கு ஏன் தனி ஏற்றம் என வினவின் கிடைக்கும் பதில் இது: அஃது ஓர் இந்திய மொழி; நம் தேசியத் தன்மானத்தைக் காப்பதற்கு ஓர் இந்திய மொழியைத் தான் தேர்ந்தெடுக்க வேண்டும். அடுத்து மற்ற இந்திய மொழிகளைக் காட்டிலும் இந்திதான் பெரும்பான்மை மக்களால்

பேசப்படும் மொழி; ஆகையால் மக்களாட்சிக் கோட்பாட்டின்படி அதையே இந்தியப் பொது மொழியாக்கவேண்டும்.

இவ்வாதங்கள் எவ்வளவு தூரம் உண்மையென அடுத்துக் காண்போம்.★



''ஆரியக்கூட்டம், பார்ப்பனக் கூட்டம், வடநாட்டாரின் கூலிகளாகி, அவர்களுக்கு வால் பிடித்து, நம்மவர் சிலரை விபீஷணர்களாக்கிக் கொண்டு தேசிய மொழி என்ற பெயரால், நம்மீது வடமொழியைச் சுமத்துகிறது என்றால், நம்மை, நம் நாட்டை, வடநாட்டாருக்குக் காட்டிக் கொடுக்கிறது என்றால் நாம் அதற்கு இடம் கொடுக்கலாமா? இது மொழிப்போராட்டம் மட்டுமில்லை, கலைப் போராட்டம், கலாசாரப் போராட்டம், மானாபிமானப் போராட்டம் என்றுகூடச் சொல்லுவேன். இது உரிமை வேட்கைப் போராட்டமாகும். இப்போராட்டத்தின்போது எந்த ஒரு திராவிடனாலும், எந்த ஒரு உண்மைத் தமிழ் மகனாலும் தூங்கிக்கொண்டிருக்க முடியாது.''

— தந்தை பெரியார் - *1948*

'' ஒரு மொழியினை இன்னொரு மொழி பேசுவோரிடம் வலுக்கட்டாயமாகத் திணிக்க முற்படுவது ஒருமைப்பாட்டுணர்விற்கு ஊறு விளைவிப்பதாகும்''

— முதறிஞர் எல். கிருஷ்ணசாமி பாரதியார் - ' நமது அரசியல் அமைப்புச் சட்டமும் மொழிகளும் ' (1985)

## 8 தேசியத் தன்மானம்

"அந்நிய மொழியான ஆங்கிலத்தை அரியாசனத்தில் இருந்து அகற்ற வேண்டும்; அவ்விடத்தில் இந்திய மொழியான இந்தியை அமர்த்த வேண்டும்; அப்பொழுதுதான் நம் தேசியக் கௌரவம் காப்பாற்றப்படும்'' இப்படி ஒரு வாதம் பல ஆண்டுகளாக ஓங்கிய குரலிலே பேசப்படுகிறது தேசியத் தன்மானத்தைப் பற்றி மேல் போக்காகப் பேசிப் பயன் இல்லை. இந்திய மக்கள் தொகுப்பின் தன்மையை உள்ளபடி உணர வேண்டும். இந்திய மக்கள் ஒரே தேசிய இனத்தைச் சார்ந்தவர்கள் அல்ல. ஏற்கனவே குறித்தது போல் இந்தியா ஒரு தேசிய-நாடு (Nation State) அல்ல; அது பல தேசியங்களைக்கொண்ட நாடு (Multi National State). தனித்தவரலாறு, பாரம்பரியம், பழக்க வழக்கங்கள் மொழி, இலக்கியம், பண்பாடு ஆகியவற்றைக் கொண்டுள்ள தால் கன்னடியர் தனி தேசியத்தார். அதே போன்று மகா ராஷ்டிரர், வங்காளிகள், மற்றுள்ளோர் தனித்தனி தேசிய இனத்தவர்கள்; ஒவ்வொரு தேசிய இனத்திற்கும் அதனதன் மொழி ஏற்றமடைவதில்தான் பெருமை. ஒவ்வொன்றின் தேசியத் தன்மானத்திற்கும் அடையாளமாக – சின்னமாக– அதனதன் மொழியேவிளங்க முடியும். தமிழருக்குத் தமிழ், ஆந்திரருக்குத் தெலுங்கு என்ற முறையில்தான் நடைமுறையில் மொழிக் கௌரவம் பாராட்டப்படுகிறது. அதுதான் தேசியச் சுயமரியாதையால் வலியுறுத்தப்படுகின்ற ஒரு நிலை,

இந்த நிலையில் மலையாளிக்குத் தமிழ் அந்நியமொழி மகாராஷ்டிரருக்கு குஜராத்தி அந்நிய மொழி; இந்தி மொழியினர் அல்லாதாருக்கு இந்தி அந்நிய மொழி; ஆங்கிலம்

அந்நிய மொழி எனில், நமக்கு இந்தி அதைவிட அந்நிய மொழி என்பது தான் உண்மை.

தனக்கு ஆங்கிலம் அந்நிய மொழி (Foreign language) என்றும், இந்தி அயல்மொழி(alian language) என்றும். ஆந்திர ஆளுநராயிருந்த திரு. பட்டம்தாணுப்பிள்ளை அவர்கள் கூறினார். பதவியில் இருந்ததால் உண்மையை அவர் சுற்றி வளைத்துத்தான் கூற முடிந்தது, அதற்காக நாமும் அந்நிய அயல் என்ற வார்த்தைகளுக்கு இடையே யுள்ள வேற்றுமையைத் ''துருவி'' ஆராய வேண்டியதில்லை உண்மையை அப்படியே கூறுவற்கு அச்சப்படவேண்டிய தில்லை.

இந்தி மொழியினர் அல்லாதாருக்கு ஆங்கிலத்தைவிட இந்தியே அந்நிய மொழி; ஏனெனில் அவர்கள் ஆங்கிலத்தை பல ஆண்டுகளாகப் பயின்று, பெரும் பயனும் பெற்று வருகி றார்கள். ஆகையால் இந்தியை இந்தியாவின் பொது மொழியாக்குவதன் மூலம், பல வேறுபட்ட இந்தியச் சமுதாயங்கள் அனைத்தின் தேசியக் கௌரவத்தையும் திருப்தி செய்ய முடியும் என எண்ணுவது ஒரு போலி நம்பிக்கையே. இதைத் தமிழ்ச் சமுதாயம் என்றைக்கோ உணர்ந்து விட்டது; மற்ற சமுதாயங்கள் உணர்ந்து வருகின்றன. ★

''இந்தியை நம் நாட்டில் நுழைய விடுவோமானால், தமிழ் வளர்ச்சி, நாகரிக முற்போக்கு வளர்ச்சி பூராவும் அழிந்துபோகும். தமிழகத்தில் இந்தி நுழைந்துவிடுமானால் தமிழகமே மறைந்து போகும். மாண்டுபோகும்''

— திரு. வி. க. — *1948*

# 9. பெரும்பான்மையோர் மொழி

இந்திக்குத் தனிச் சலுகை தரவேண்டும் என்ற கோரிக்கையை முறைப்படுத்த ஜனநாயகக் கோட்பாடும் துணைககு அழைக்கப்படுகிறது "இந்தியாவில் பாதிப் பேருக்கு மேல் இந்தி பேசுவதால், அது பெரும்பான்மையோர் மொழி. மக்களாட்சிக் கொள்கைப்படி, பெரும்பான்மை பலத்தைக் கொண்டே பொது விவகாரங்களில் ஒரு முடிவிற்கு வர முடியும்; ஆகையால் பெரும்பான்மை மக்களால் பேசப்படும் இந்தி மொழியை இந்தியாவின் பொது மொழி அல்லது ஆட்சி மொழியாக்க வேண்டும்.''

இதுவும் ஒரு சொத்தை வாதம். இந்தி பெரும்பான்மையோர் மொழியல்லவென்றும், அதற்குத் தனித்த உயர் நிலையை நல்க வேண்டும் என்ற வெறியில், வேறுபட்ட சார்பு மொழிகளின் தனித் தன்மைகளை மறைத்து ஒரு மொழியென்ற பொய்க் காட்சியை அதற்கு நல்க முனைகின்றனர் என்றும், மற்றவர் மீது திணிக்கப்படும் இந்தி உண்மையில் சிறுபான்மையோர் மொழிதான் என்றும் புள்ளி விவரங்களைக் கொண்டு அறிஞர் பலர் விளக்கியுள்ளனர். அய்ந்து வகையான தனிமொழிகளை இந்தியென ஒன்றாகச் செயற்கையாகக் காட்டுகிறார்கள். மேலை இந்தி அல்லது பச்சானி என்பது பங்காரு, பிரஜ்பாஷா, கனோஜ், பந்தேலி, முதலிய மொழிகளையும், கீழை இந்தி அல்லது கோசலி என்பது அவதி, பகேலி, சதீஸ்கடி ஆகியவற்றையும் பிகாரி என்பது போஜ்புரி மைதிலி. மகஹி ஆகியவற்றையும் இராஜஸ்தானி என்பது மால்வி. மார்வாடி, மேவதி, ஜைபுரி ஆகியவற்றையும் பகாடி என்பது கர்வலி, காமயூனி நேபாளி ஆகியவற்றையும்

கிளைகளாகக் கொண்டவை. இவற்றையெல்லாம் ஒன்றாகக் கணக்கிட்டாலும் இந்தி மக்கள் சுமார் 40 விழுக்காடு தான்!

வாதத்திற்காக, இந்தியைப் பெரும்பான்மையோர் மொழியென்றே கொள்வோம். அந்த நிலையிலும் அதை இந்தியப் பொது மொழியாக்க முயல்வது ஜனநாயகத்திற்கு முரண்பட்ட செய்கையே, பெரும்பான்மை — சிறுபான்மை என்ற வாதம் எப்பொழுது பொருந்தும்? சிறுபான்மையோர் பெரும்பான்மையோராக ஆவதற்கான வாய்ப்பும், பெரும்பான்மையோர் சிறுபான்மையினர் ஆவதற்கான சாத்தியக்கூறும் உள்ள நிலையில்தான் அத்தகைய ஜனநாயகக் கொள்கையை வலியுறுத்துவது பொருந்தும்— நியாயமும் ஆகும். பெரும்பான்மையினர் ஆள்வர்; சிறுபான்மையினர், பெரும்பான்மையினர் ஆக முடியும் என்ற நம்பிக்கையில்—அப்படி அவர்கள் ஆகும் வரை—இருக்கும் ஆட்சியை ஏற்றுக்கொண்டு தங்கள் செல்வாக்கை வளர்க்கும் பணியில் ஈடுபடுவர். இதுதான் மக்களாட்சியின் உண்மையான நடைமுறை ஏற்பாடு. இந்தி ஏகாதிபத்தியத்தை நிலை நாட்ட இந்த ஏற்பாட்டைக்கையாள முயல்வது விவரமற்ற அல்லது விஷமம் நிறைந்த செயல். என்றைக்கேனும் பெரும்பான்மையோர் எனச் சொல்லப்படும் இந்திக்காரர் சிறுபான்மையினராவதற்கான சாத்தியக் கூறு உண்டா? அல்லது இந்தி மொழியினர் அல்லாதார்தான் பெரும்பான்மையினராகும் வாய்ப்பு உண்டா? அப்படிப்பட்ட மாற்றம் என்றைக்கும் ஏற்பட முடியாது. அப்படியானால், இந்தி ஏகாதிபத்தியவாதிகளும், அவர்களைச்சார்ந்து நிற்போரும் விரும்புவதென்ன? பெரும்பான்மையினர் எனச் சொல்லப்படும் இந்திக்காரர் என்றும் ஆளவேண்டும், மற்றவர் அதை ஏற்க வேண்டும் என்பதுதானே?

அரசாங்க மாற்றத்திற்கு வகுக்கப்பட்டுள்ள சிறுபான்மை பெரும்பான்மை எனும் அரசியல் ஏற்பாட்டை தேசிய இனச் சிக்கல்களில் ஒன்றான மொழிச் சிக்கலைத் தீர்க்கப் பயன்படுத்துவது சிறிதும் பொருத்தமல்ல.

## 10. அப்படிச் சொல்லவில்லையே!

"இந்திக்காரர் ஆளவேண்டுமென்றும், அதை ஏனையோர் ஏற்க வேண்டுமென்றும் நாங்கள் சொல்லவில்லை; இந்திய அரசியல் சட்டத்திலும் அப்படியோர் ஏற்பாடு இல்லை" என மறுத்துரைப்பர், மெய்தான்! வெளிப்படையாக அப்படி ஓர் ஏற்பாடு இருந்தால் மொழியுரிமைப் போராட்டக்காரர்களின் பணி மிக எளிதாகி விடுமே! இந்தி மொழியினர் அல்லாதார் மீது சவாரி செய்யும் முயற்சி மறைமுகமாக-தந்திரமாக-அல்லவா கையாளப் படுகிறது? அதனால்தானே பாதகமாகப் பாதிக்கப்படு பவர்களில் கூடப் பலர் "சூடு" தெரியாதவர்களாக இருக்கிறார்கள்.

ஒவ்வொரு மாநிலத்திலும் அதன் எல்லைக்குட்பட்ட வரையறுக்கப்பட்ட காரியங்களைக் கவனித்துக் கொள்ளத் தனித்த அரசாங்கம் உண்டு. எல்லா மாநிலங்களிலிருந்தும் நாடாளுமன்றத்திற்கு உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படு கிறார்கள். அவர்களில் யார் வேண்டுமானாலும் மத்திய அமைச்சர் ஆகலாம். இப்படியெல்லாம் வழியமைத்துக் கொடுத்திருக்கும் அரசியல் சட்டத்தின் தகுதியையும், தரத்தையும் மதிப்பிட இந்நூல் எழுதப்படவில்லை. இருக்கிற அளவில், அளிக்கப்பட்டிருக்கும் உரிமைகளேனும் நடைமுறையில் நமக்குக் கிட்டுமா? இந்திய அரசியல் சட்டத்தின் மத்திய ஆட்சி மொழி பற்றிய ஏற்பாட்டின்படி கொடுக்கப்பட்டிருக்கும் உரிமைகள் கூட பறிக்கப்படு கின்றன, எனத்தான் சொல்லவேண்டும்.

நவீன அரசாங்கங்கள் எந்த ''இசங்களின்'' — கொள் கைகளின் — அடிப்படையில் அமைக்கப்படுபவை ஆயினும் மனித வாழ்வில் அரசின் ஈடுபாடு அதிகரித்துக்கொண்டு தான் போகும். அரசின் தலையீட்டை அதிகம் விரும்பாத அமெரிக்க முதலாளிய அமைப்பில் கூட அப்படித்தான். ஆகையால் வேலை வாய்ப்பிற்கும், ஊதியத்திற்கும் அர சாங்கத்தை நம்பியிருக்கவேண்டிய அவசியச் சூழல் உரு வாகியுள்ளது. அரசாங்க அலுவல்கள் எந்த மொழியில் நடத்தப்படுகின்றன; அந்த அலுவல்களுக்குத் தகுதியாக் கிக் கொள்வதற்கான வாய்ப்பினை எந்த மொழியின் மூலம் பெற முடியும் என்பவை மிக மிக முக்கியம். இன்றைய இந்திய அரசியல் சட்டப்படி மத்திய ஆட்சி மொழி என் னும் நிலையை இதற்குள் இந்தி மட்டுமே பெற முடிந்த நிலையிலிருந்தது; ஆனால் இடையறாப் போராட்டத் தின் விளைவாக பண்டித நேரு அவர்களின் வாக்குறுதி யைப் பெற்றோம் அதன் பயனாக, ஆங்கிலம் இந்தியோடு இணை (Associate) ஆட்சிமொழியாகுமென்றும், இந்தி மொழி பேசாதோர் தாங்கள் விரும்பும் வரை, மத்திய அரசாங்க நிர்வாகத்தில் எப்பொழுதும்போல் ஆங்கில மொழியைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்றும் நம்பப் பட்டது. அதற்கான ஆட்சிமொழிகள் சட்டம் கொண்டு வரப்பட்டது; பண்டித நேருவைத் துதிபாடுவதிலும் அதே நேரத்தில் அவர் வழியைப் புறக்கணிப்பதிலும் பழக்கப் பட்டு விட்டவர்கள் ஆட்சிமொழிகளைப்பற்றி அவர் கொடுத்த வாக்குறுதியை காற்றில் விட்டனர். மீண்டும் எதிர்ப்பு — போராட்டம், தமிழகத்து இளைஞர் பலர் உயிர் கொடுத்தனர். ஆட்சி மொழிகள் சட்டம் திருத்தப்படும் என அறிவிக்கப்பட்டது. காத்திருந்து அலுத்தோம். கடைசியில் 1968-ல் திருத்தம் வந்தது. எதிர்பார்ப்பு ஏமாற்றமாய் முடிந்தது.

நிகழ்ந்ததென்ன? இந்தி மொழிக்காரரின் ஆதிக்கத் திற்கான வாய்ப்பு மேலும் அதிகரித்து விட்டது.

நிர்வாகத் துறையில் கீழ் மட்டத்தில் இருந்து மேல் மட்டம் வரை தங்கள் மொழி இந்தி இருந்தால்தான் தங்கள் மக்களாட்சியின் முழுச் சுகத்தையும் அனுபவிக்க முடியும் என்றும், அந்நிய மொழியான ஆங்கிலத்தின் சுமையினை ஏற்க முடியாதென்றும் திட்டவட்டமாக, விழிப்புணர்வோடு, வெறித்தனத்தோடு சொன்ன சொல் ஏறிற்று; இந்தி மொழி பேசாத ''ஏழைகள்'' சொல் அம்பலத்தில் ஏறவில்லை.

ஆங்கில மொழி அவர்களுக்குச் சுமையெனின் இந்தி மொழி நமக்குச் சுமையாகாதோ நிச்சயம் சுமை என்பது மட்டுமல்ல, அச்சுமையை இந்திய மக்களில் ஒரு பகுதியினர் மட்டுமே சுமக்கவேண்டியவர்கள் ஆகின்றனர்; இந்தி மொழியினர் அல்லாதார் மொழிச் சமத்துவத்தை - சம வாய்ப்பினை இழக்கின்றனர். அதனால் இரண்டாந்தரக் குடிமக்களாக ஒரு படி தாழ்ந்தவர்களாக (Subordinates) ஆகின்றனர். தாழ்ந்தவன் முழு உரிமையையும் அனுபவிக்க முடியாதென்பது மட்டுமல்ல, அவனை எளிதாகச் சுரண்டவும் (Exploit) முடியும். சுரண்டப்படும் சமுதாயத்தின் சுதந்திரம் - உரிமை வாழ்வு எத்தனை காலம் நீடிக்கும்?

நிர்வாகத்துறையில் இந்தியைக் கற்று அவர்களோடு சம நிலையில் போட்டி போட முடியாதென்பது மட்டுமல்ல, பொருளாதார விவகாரங்களிலும் இந்தி மொழியறிவைப் பெற்று, இந்திக்காரருக்கு இணையாகச் செயல்பட முடியும் என்பது நடவாத காரியம். இஃது ஒன்றும் நீண்ட நாட்களுக்குப் பின் தெரிந்துகொள்ள வேண்டிய ஒன்றல்ல. இந்தி மொழி அல்லாதோருக்குப் பாதுகாப்பளிப்பதற்கென 1968இல் ஆட்சி மொழிச் சட்டம் திருத்தப்படும் வேளையில், தி.மு.க. பாராளுமன்ற உறுப்பினர் ஒருவர் உணவுநிலை பற்றி விவாதிக்கக் கூடிய குழுக் கூட்டத்தில் இருந்து வெளியேற நேர்ந்தது. இந்திப் பேச்சுக்

களை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கக் கோரிய வேண்டு கோள் புறக்கணிக்கப்பட்டது. இந்திமொழி பேசாதார் வாய்ப்புக் குறைபாட்டினைப் போக்கச் சட்டம் நிறை வேற்றப்படும் வேளையில், சூடு தணியாத பொழுதே, இந்தக் கதியென்றால், நாளாவட்டத்தில் எப்படி சுயமரி யாதை உணர்வுடன் மத்திய அரசு விவகாரங்களில் நாம் நம் முழுப்பங்கினை ஆற்ற முடியும் ?

நிர்வாக, அரசியல், பொருளாதாரத் துறைகளில், சமத்துவத்தையும், முழு வாய்ப்பினையும் இழந்தபின் பண் பாட்டுத் தனித் தன்மையைத்தான் எப்படிக் காப்பாற்ற முடியும் ?

ஆக, 1950-ஆம் ஆண்டு அரசியல் சட்டப்படியும், மத்திய அரசாங்கப் போக்கின்படியும் இந்தி மொழி பேசு வோர் மற்றவர்களைவிட அதிகச் சலுகையும், ஆதிக்க வாய்ப்பும் பெற்றிருப்பது உறுதி. இதை உரிமையுணர்வு கொண்ட யாராலும் சகிக்க முடியாது. ★

''இந்தியை எதிர்ப்பானேன், அதற்கு ஒரு போர் தொடுப் பானேன்? ஒரேயடியாகத் தனி நாட்டிற்காகப் போர் தொடுத்துவிட்டால், அதோடு இந்திச் சனியனும் தொலைந்து போகிறது இந்த வடநாட்டானோடு சேர்ந் திருந்தால் அல்லவா இந்தியைப் படிக்கச் சொல்வான்?''
—மூவாலூர் ராமாமிர்தத்தம்மையார்—1948

''ஆங்கிலம் நமக்கு அயல்மொழி அல்ல. இந்தியாவின் ஒற்றுமைக்கு அது மிகவும் இன்றியமையாதது. என்றைக்கு நாம் ஆங்கிலத்தை விடுகிறோமோ அன் றைக்கே நம்முடைய சுதந்திரம் பறிபோய் விடும்.''

—சர். சி. வி. ராமன்.—மேற்கோள் ''இந்தி ஆட்சி மொழி ஆனால் !''—நூல்.

## 11. எங்களுக்குத் தெரியுமே !

ஆட்சி மொழிக் கொள்கையிலும் அதை நடைமுறைப் படுத்துவதிலும் உள்ள முறை கேட்டையும், அரசியல் சட்டத்திலிருக்கும் குறையையும் நடுவண் அரசாங்கம் போக்காமைக்கான காரணம், எல்லா மட்டங்களிலும் இந்தியைப் புகுத்த முயலுவதும், ஆங்கிலத்தின் பிடியை அகற்றித் தாய் மொழிக்கு உரிய இடத்தைத் தராமையுமே ஆகும் எனச் சில முற்போக்கு அரசியல் கட்சியினர் கூறுகிறார்கள். மொழிச் சிக்கலை விரைவில் தீர்த்து, முக்கியமான பொருளாதாரச் செயற்பாடுகளில் நாட்டம் செலுத்த வேண்டும் என்ற இவர்களுடைய உண்மையான ஆர்வத்தைப் பாராட்டலாம். இருப்பினும் பிரச்சனை அவர்கள் நினைப்பதுபோல் அவ்வளவு எளிதல்ல, ஆங்கிலத்தின் பிடி தளர வேண்டும்— அதற்கிருக்கும் எஜமானத் தன்மை போக வேண்டும்— என்பதில் யாருக்கும் வேறுபட்ட கருத்து இருக்க முடியாது.

அவர்களுடைய கொள்கையின் அடுத்த கட்டம் இது: ஆங்கில ஆதிக்கத்தை - அதாவது வேண்டாத அளவிற்கு அதற்குத் தரும் முக்கியத்துவத்தை - நீக்கிவிட்டு, தாய் மொழிகளுக்கு மாநில மட்டத்தில் எல்லாக் கட்டங்களிலும் முழு வாய்ப்பு அளிக்க வேண்டும். இதுவும் அனைவராலும் ஏற்றுக் கொள்ளக் கூடிய கருத்தே. குறிப்பாகக் கல்வித் துறையில் ஆங்கிலத்தின் மூலம் பாடங்களைக் கற்பதால் மாணவர்கள் அவற்றைப் புரிந்து கொள்ளத் துன்பப்படுகிறார்கள். ஆசிரியர்களும் அவர்களுக்குப் பயன் தரும் வகையில், அவர்களுக்கு நன்கு புரியாத அந்நிய மொழியில் நிறையச் செய்திகளைச் சொல்ல அல்லல்பட வேண்டியிருக்கிறது. தாய்

மொழியின் மூலம் கல்வி புகட்டப்படும் எனின் கல்வியின் தரம் நிச்சயம் உயரும் ; மாணவர்களும் நம்பிக்கையோடும், உற்சாகத்தோடும் படித்து அதிகத் தேர்வெண்கள் பெறுவர். அவர்களுடைய சிந்தனைவளம் பெருகும். கண்டுபிடிக்கும் திறன் கூர்மையடையும்.

இதுவரை மேற்கண்ட கொள்கை நமக்கு உடன்பாடு தான், இனி, பிரச்னையின் முக்கியமான உண்மையான விவ காரத்தைப் பொறுத்த வரையில் அவர்கள் கூறுவதைச் சற்றுக் கவனிப்போம்; நடுவண் அரசாங்க மட்டத்தில் ஆங்கிலத்தின் இடத்தை நீக்கிவிட்டு, மிகக் குறைந்த அளவில் இந்தியை இந்தியாவின் ஆட்சி மொழியாக ஏற்றுக்கொள்வோம்; அப்படி ஏற்றுக்கொள்வதற்கும் ''காலக்கெடு'' கேட்டுக்கொள்வோம் என்பர்.

அதே குறைந்த அளவிற்கு. இந்திக்குப் பதிலாக ஆங்கி லத்தை ஏன் வைத்துக் கொள்ளக் கூடாதெனக் கேட்டால் ஆங்கிலத்தை இந்தியாவின் பொது மொழியாக்குவது நம் தேசியத் தன்மானத்திற்கு இழுக்கு என்பர். தேசியத் தன் மானம் என்ற பெயரில் இந்தியை நுழைக்க முயல்வது அறி விற்குப் பொருந்தாத ஒன்று என்பதை ஏற்கனவே கண்டோம்.

★

"இந்தியக் கூட்டரசியலில் சேர வேண்டுமானால் அங்கு இந்தியில் தான் பேசவேண்டும், தமிழில் பேசக்கூடாது என்றால், தமிழுக்கு இழிவைத் தரும் அவ்வரசில் மான முள்ள தமிழ்நாடு சேராது....தமிழ்நாட்டில் பார்ப்பனருக்கு செல்வாக்கில்லை. அதனைப் பெற வட நாட்டாரைக் கொணர்ந்து அவர்களைச் சிறப்பித்து அவர்களால் தம் மைச் சிறப்பித்துக் கொள்ளுகின்றனர்....அவ்வாறு நந்தமிழ் நாட்டில் வடநாட்டவர் செல்வாக்கும், ஆணையும் ஓங்க ஓங்கத் தமிழர்களின் செல்வாக்கும் ஆணையும் தாழ்ந்து தாழ்ந்தே செல்லும். இதையுணர்ந்தே இந்தியைத் தமி ழர்கள் எதிர்க்கிறார்கள்,', —மறை. திருநாவுக்கரசு— நூல் 'இந்தியால் தமிழ் எவ்வாறு கெடும்?' (1939)

## 12. வெறி! குறுகிய நோக்கு!!

"குறைந்த அளவிற்கு நடுவண் ஆட்சி மொழியாக இந்தி இருக்கட்டும் என்ற ஒரு புதிய ஏற்பாட்டைக் கூட ஏற்க மறுப்பவர்கள் மொழி வெறியர்களாகத்தான் இருக்க வேண்டும், சிறிய அளவிற்கேனும் விட்டுக் கொடுத்தால் என்ன? இப்படியொரு கண்டனக் குரல்.

இந்திய மொழிகளில் எந்த ஒரு மொழியேனும் தனிச் சலுகையோ, ஏற்றமோ பெறும் எனில் அதனால் ஏற்றத் தாழ்வுகளும், முறை கேடும் விளையும் எனக் கண்டோம். குறைந்த அளவிற்கு இந்தி மொழிக்குத் தனிச் சலுகை கொடுத்தால் குறைந்த அளவிற்கேனும் முறைகேடு இருக்கத்தான் செய்யும். அநீதியை ஓரளவிற்கு அனுமதித்தால், அதனால் சலுகை அடைவோன் மேலும் மேலும் சலுகை அடையத்தான் செய்வான்; உரிமையைச் சிறிது விட்டுக் கொடுக்கப் பழகிவிட்டவன் மிகத்தாழ்வு அடையும் வரையில் உரிமையின் அருமையை உணரவே மாட்டான். ஆகையால், மொழிச் சமத்துவக் கோரிக்கையைச் சிறிதளவிற்கேனும் விட்டுக் கொடுக்கவேண்டுமெனக் கூறுவது, ஒரே அடியாகத் தாழ்ந்துபோக உனக்கு விருப்பமில்லை யெனில். மெல்ல மெல்லத் தாழ்ந்து போகலாமே எனச்சொல்வதற்கு ஒப்பாகும்,

மேலும், விட்டுக்கொடுப்பதற்கு "மொழிஉரிமை" யென்ன தனி மனிதனின் சொந்தச் சொத்தை? இரக்க உள்ளங் கொண்டு, தன் சொந்தச் சொத்தை ஈத்து உவப்பதில் தனி

**மனிதர்கள் ஈடுபடலாமே ஒழிய, சமுதாயத்தின் உரிமைகளைக் கடுகளவேனும் தானம் செய்ய எந்தத் தலைவனுக்கும் உரிமையில்லை.** மொழி உரிமை இன்றையச் சமுதாயத்தின் செல்வம் மட்டும் அல்ல; எதிர்காலத் தலைமுறையினரின் செல்வமும் கூட, ஆகையால், தன் முட்டாள்தனத்தாலோ அல்லது விழிப்புணர்ச்சியற்ற சோம்பேறித் தனத்தாலோ இன்றைய சமுதாயம் உரிமையை இழக்கவிடுமேல் அது பிற்காலத் தலைமுறைக்குச் செய்யும் பெரும் துரோகமாகும்.

ஆக, மொழி உரிமைக்குரல், வெறியின் விளைவல்ல; அறிவின் வெளிப்பாடு.

மேலும் வெறி, குறுகிய மனப்பான்மை என்ற சொற்களுக்குச் சரியான பொருள் அறிவது நலம். தன் ஆதிக்கத்தை மற்றவர் மேல் செலுத்த வேண்டுமென்ற வேட்கையில், தனக்குத் தனிச் சலுகைகோரிப் போராடுவதுதான் வெறித்தனம். அப்படிப் பார்த்தால், மற்றவர்க்கு இல்லாத தனிச் சலுகை தனக்கு வேண்டுமெனத் தமிழர் கேட்கவில்லையே! பின் எப்படி மொழி உரிமை இயக்கம் தன்னலத்தின் பாற்படும்?

அடுத்து, சமுதாயங்கள் ஒன்றுபடும்பொழுது நாம் தனித்திருக்க முயல்வோமானால் அது குறுகிய நோக்கு. நாம்ஒன்றும் தனித்துச் செல்ல வேண்டுமெனக் கண்மூடித்தனமாகக் கேட்கவில்லை; **ஒன்றுபடுவதற்கான நியாய அடிப்படையைச் செம்மைப் படுத்துவதன் மூலம் ஒற்றுமையைப் பலப்படுத்துவதற்கான வழியைக் கூறுகிறோம்.** நம்மை யாரேனும் குறுகிய மனப்போக்கினர் எனக் குற்றம் சாட்டினால் அது பொருந்தாக் கூற்றே. ★

''இந்தியாவில் உள்ள எல்லா மொழி மக்களுக்கும் பொதுவாகத் தராசைத் தூக்கி நிறுத்துகிற மொழி அங்கிலமே என்று கூறுவது மிகவும் உண்மையாகும்.''
—டாக்டர் சர். சி. பி. ராமஸ்வாமி அய்யர்—30.6.1963

# 13. நேருவின் உறுதி மொழி

பண்டித நேரு அவர்கள் இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற தலைவர்களில் ஒருவர். குடியரசுக் கோட்பாட்டில் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டிருந்தவர். மக்கள் குரலுக்கு மதிப்பளித்தவர். விடுதலை வீரராக இருந்த பொழுது முழு உரிமை வேண்டும் என்பதற்காகப் பெருந் தியாகம் செய்தவர். எதையும் இழக்கத் தயாராக இருந்தவர்.

போராட்ட காலத்தில் உரிமையை முழுமையாகக் கேட்டவர், விடுதலை இந்தியாவின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றபின் அனைவருக்கும் எல்லா உரிமைகளையும் அள்ளிக் கொடுத்துவிடவில்லை. அஃது இயற்கைதான். உரிமைகள் அள்ளிக் கொடுக்கப்படும் பொருள்கள் அல்ல. தகுதியுடையோர்க்கே உரிமை கிட்டும்; அதற்கான விலையை நாம் கொடுக்கவேண்டும்; ஓயாத விழிப்பே அதன் விலை-(Eternal vigilance is the price of liberty). இந்திய அரசியல் சட்டம் இயற்றப்படும் பொழுது இந்தி மொழியினர் அல்லாதோர் போதுமான விழிப்புணர்ச்சியுடன் நடந்து கொள்ளவில்லை; ஆகையால் மொழியுரிமையை இழக்க நேரிட்டது. அதன் பின்னும், தமிழகத்தின் மொழியுணர்வைத் தமிழகத்துப் பிரதிநிதிகள் சரியானபடி மத்திய அரசாங்கத்திற்கு உணர்த்தவில்லை அல்லது உணர்த்தவல்லவர்களை 1967 வரை நாம் அனுப்பவில்லை. இருப்பினும், நம் கோரிக்கையின் வேகத்தை அறிந்த அளவிற்கு நம் குரலை நேரு மதித்தார். ஆங்கிலத்தின் இடத்தை இந்திய மொழிகளில்

ஒன்றான இந்தி நிரப்புமானால் அது மற்ற மொழி பேசுவோர்க்கு அநீதி விளைவிப்பதாகும் என்ற நம் குறைபாட்டினை ஓரளவிற்கு நீக்க முயன்றார். அதன் விளைவே 'இந்தி மொழியினர் அல்லாதோர் விரும்பும் வரை ஆங்கிலம் மத்திய அரசாங்கத்தின் இணை (Associate) ஆட்சிமொழியாக நீடிக்கும்' என்ற அவருடைய வாக்குறுதி.

இந்த வாக்குறுதி நம் வேண்டுகோளினை முற்றிலும் புரிந்து கொண்டு கொடுக்கப்பட்ட ஒன்று அல்ல; அந்த வேண்டுகோளினை முற்றிலும் நிறைவு செய்யும் உறுதி மொழியும் அல்ல. நாம் வேண்டியது மொழிச் சமனியத்தை; இந்தியோடு ஆங்கில நீடிப்பை அல்ல. அப்படிப் பட்ட ஏற்பாட்டினால் சமனியம் நிலை நாட்டப்படாது. அதுமட்டுமின்றி அதனால் புதிய சிரமங்களும் வந்து சேரும்.

இந்தி, ஆங்கிலம் ஆகிய இரண்டும் மத்திய ஆட்சி மொழிகள் என்ற நிலையை ஏற்றுக் கொண்டால். நம்மில் சிலர் ஆங்கிலத்தின் மூலம் உயர்வு அடைய முயல்வர்; இன்னும் சிலர் இந்தியின் மூலம் அவ்வுயர்வை அடைய முயல்வர். நமக்குள்ளேயே இரு பிரிவுகள் தோன்றும்; இருக்கின்ற வேற்றுமைகளோடு இப்படியும் ஒரு புதிய சிக்கல் நுழைவதால் தொல்லைகள் மிகும்; தாய்மொழியின் நிலை மிகத்தாழ்ந்து விடும். மத்திய அரசின் நிர்வாக எந்திரம் சீர்கெட்டுத் திறமையிழக்கும். ஆகையால் நேருவின் வாக்குறுதி நிறைவேற்றப் படுவதால் நம் கோரிக்கை பூர்த்தியாவதில்லை என்பதோடு, புதிய கேடுகளும் வந்து சூழும் என்பதை நாம் கருத்தில் கொள்ள வேண்டும். ஆகையால் நேருவின் வாக்குறுதியை நிறைவேற்ற அரசியல்சட்டத்தைத் திருத்தவேண்டும் என நாம் கேட்பது தற்கொலைக்கு ஒப்பாகும். அத்தகைய திட்டத்திற்காக நாம் எடுத்துக் கொள்ளும் பெருமுயற்சியை மொழிச் சமனியம் என்ற நம் விழுமிய கோட்பாட்டிற்காக எடுத்துக்

கொள்வது தான் நன்மை பயக்கும். ★

"இந்தியா ஒரே அரசின் கீழ் இருக்கிற காலம் வரையில், மத்திய ஆட்சி மொழிகளாகப் பதினான்கு (இப்பொழுது பதினைந்து) தேசிய மொழிகளும் ஆக வேண்டும்—அப்படி ஆகும் காலம் **வரையில்**, தேவைப் படும் அளவுக்கு ஆங்கிலம் நீடிக்க வேண்டும்."

— நாவலர் இரா. நெடுஞ்செழியன். 4-8-1963.

"பிற மொழியினருக்குப் பொதுவாகவும், தென்னாட்டினருக்குச் சிறப்பாகவும், ஹிந்தியில் தேர்ச்சி பெற்று அம் மொழியினருக்கு இணையாக விளங்குவது என்பது அருமை. அதன் காரணத்தால், யாவருக்கும் சம அந்தஸ்தும் சம சந்தர்ப்பமும் என்று இந்திய அரசியல் அமைப்பின் முகவுரை பிரகடனம் செய்வது கறிக்குதவாத வெறும் ஏட்டுச் சுரக்காய் ஆகிவிடும்."— சா. கணேசன்: 7-7-1963.

"நாட்டு மொழிகளில் ஒன்றாகிய ஹிந்தியை மட்டும் ஆட்சி மொழியாகச் செய்வது அதை பேசுவோருக்குத் தனிச் சலுகைகள் காட்டுவதில்தான் முடியும் ... எண்ணிக்கை மீது கணக்கிட்டு, ஒரு மொழிக்கு அளிக்கப்படும் சலுகை, நாட்டின் பிளவுச் சக்திகளை வளர்ப்பதோடு, ஒற்றுமையைக் குலைக்கும்." டி. டி. கார்வே : (மராத்திய மாநிலம்) —கல்கி : 7-7-1963.

"ஹிந்தி பேசாத மக்கள், ஹிந்தி ஏகாதிபத்தியத்திலிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டும். அத்துடன் தங்களையும் ஹிந்தி பேசும் மக்களையும் நவீன கால முன்னேற்றத்துக்கு அழைத்துச் செல்ல வகை செய்ய வேண்டும். அதற்கு ஆங்கிலம் ஒன்றுதான் ஏற்றது. ஆங்கிலமே விடுதலை அளிக்கும்; ஹிந்தி அடிமையாகத் தான் ஆக்கும்."

— பி. கோதண்ட ராவ் (கருநாடக மாநிலம்) - 14-7-1963.

## 14. குறிக் கோள்

மொழி உரிமை விழைவோரின் குறிக்கோள் மிக எளிமையானது, தெளிவானது. குறிப்பிட்ட ஓர் இந்திய மொழிக்கு மட்டுமே தனித்த சலுகை நல்குவதன் மூலம் ஏற்றத் தாழ்வுகள் ஏற்படும்; அதனால் ஒருவர் மீது மற்றவர் ஆதிக்கம் செலுத்துவதற்கான வாய்ப்பிற்கு இடம் ஏற்பட்டு விடும். அந்தச் சூழலில் போட்டியும், பொறாமையும், பகையும், சந்தேகமும் வளரும். அந்த நிலையில் இந்திய நாட்டின் ஒற்றுமைக்கு ஆபத்து நேரும்.

மேதமைக்கும் பொறுப்புணர்விற்கும் பெயர் பெற்ற பேராசிரியர் இரேன் முகர்ஜி, ஆட்சி மொழி பற்றிய சட்டத் திருத்தத்தின் பொழுது நியாயம் கோரி இந்தி மொழியல்லாதவர் கிளர்ந்தெழுந்ததைக் கண்டு வருந்தினார். பாராளுமன்றத்தில் அவர் பேசிய பொழுது இந்தியாவின் ஒருமைப்பாட்டை மொழி ஆர்வத்தின் பேரில் குலைத்துவிட வேண்டாம் எனக் கூறி, இந்திய ஒருமைப்பாடு பண்டைக் காலந் தொட்டு உள்ளது என்பதை நிரூபிக்க விஷ்ணு புராணப்பாடல் ஒன்றைப் படித்துக் காட்டினார். ஆனால் ஒன்றை மறந்து விட்டார். ஏட்டிலே இருக்கின்ற காரணத்தால் மட்டுமே எதுவும் நாட்டிலே நடப்பாக அமைந்து விடுவதில்லை. '' யாதும் ஊரே, யாவரும் கேளிர்'' என்பது சங்க காலப் பாடல். அப்படி எழுதப்பட்டுள்ளதென்பதற்காக உலகம் ஒன்றுபட்டு விடவில்லையே! பாடப் பட்டிருப்பது பாடியவனின் குறிக்கோள்தான். அந்தக் குறிக்கோளை அடைவதற்கான காரியத்தை நாம் செம்மையாகச் செய்து முடித்தால் தான் அது நடைமுறைச் சாத்தியமாகும். இல்லையேல் அது கனவு நிலையில் தான் நிற்கும். திரு. இரேன் முகர்ஜிக்கு

இது தெரிந்திருக்க வேண்டும். அவர் மேற்கோள் காட்டிய பாடலில் அமைந்துள்ள இந்தியாவில் சிந்துநதி பாய்கிறது ; ஆனால் இப்பொழுது அந்நதி பாகிஸ்தானில் அன்றோ பாய்கிறது ! ஏன் இந்த நிலை? திரு. முகர்ஜியின் மாநிலமாகிய வங்கத்தில் பிறந்தவர்தான் பெருமகன் திரு. சித்தரஞ்சன்தாஸ் என்பவர். இந்து முசுலீம் ஒற்றுமையை மிக வலியுறுத்திய விடுதலை வீரர். அவர் தம் பரந்த உள்ளம் முசுலீம்களின் அச்சத்தை அகற்றத் தக்கதாய் அமைந்திருந்தது ; அவர்களுடைய நம்பிக்கையைப் பெறத் தக்க நெறியில் இந்துக்கள் நடந்துகொள்ள வேண்டுமென ஓயாது கூறி வந்தவரும் அவரே, அவரைப் போன்ற உயர்ந்த உள்ளங் கொண்டோர் அரிதாயினர். இந்தியா இரண்டாயிற்று.

மேற்குப் பாகிஸ்தானின் உருதுமொழி ஆதிக்கத்தால், கிழக்குப் பாகிஸ்தான் வங்காளதேசம் என 1971-இல் விடுதலை பெற்றது.

பழம் பாடங்களை ஒப்புவிப்பதன் மூலம இந்திய ஒற்றுமையை நிலைநாட்ட முடியாது ; அல்லது சிலர் நினைப்பது போல் சட்டங்களை இயற்றி இராணுவத்தைத் துணைக் கொண்டு ஒற்றுமையை நிலைநாட்ட முயல்வதும் வீண் முயற்சியே. பரந்த உள்ளம்; நியாய உணர்வு. அறிவியல் நோக்கு ஆகிய சக்திகளால் மட்டுமே மெய்யான; நிலையான ஒற்றுமையை இந்தியத் தேசிய இனங்களுக்கிடையில் ஏற்படுத்த முடியும்,

இந்தியத் தேசிய மொழிகள் பலவற்றுள் ஒன்றான இந்தியை மட்டும் இந்தியாவின் ஆட்சி மொழி ஆக்க முயல்வது பரந்த உள்ளத்தையா காட்டுகிறது ?

பல தேசிய இனங்கள் சேர்ந்த கூட்டாக இந்தியா இருக்கும் பொழுது, அதில் ஒரு தேசிய இனத்திற்கு மட்டுமே நிரந்தரமான ஏற்றம் தரக்கூடிய ஆட்சிமொழித் திட்டம் எவ்வாறு நியாய உணர்வின்பாற் பட்டதாகும் ?

உலக மொழிகளில் ஒன்றான ஆங்கிலத்தை அந்நிய மொழியாக ஒதுக்கி வெறுப்பதும், அதே நேரத்தில் இந்தி மொழியினர் அலலாதாருக்கு உண்மையிலேயே மிக அந்நிய மொழியாக இருக்கும் இந்தியை அவர்கள் ஆட்சி மொழியாக ஏற்றுக்கொள்ளவேண்டுமென்பதும், அப்படி ஏற்றுக் கொண்டால்தான் அவர்கள் தேசப்பற்று உடையவர்கள் ஆவார்கள் என்பதும் எப்படி அறிவியல் கண்ணோட்டம் அல்லது நடுநிலை நோக்கு ஆகும்?

இந்தியாவை மதத்தின் அடிப்படையில் "ஹிந்துயா"வாக ஆக்க முயன்றோரும், முயல்வோரும், அதையே மொழியின் அடிப்படையில் "ஹிந்தியா"வாக ஆக்க முயல்வோரும் ஒற்றுமையின் பகைவர்கள் என உணரவேண்டும். மொழி உரிமை விழைவோரின் குறிக்கோளான "அனைத்து இந்தியத் தேசிய மொழிகளுக்கும் சமத்துவம்" என்ற உண்மையை உள்ளபடி உணர்ந்து செயல்படுத்துவதன் மூலமே இந்திய மக்களிடையே நெருங்கிய பிணைப்பினை ஏற்படுத்த முடியும். இந்திய ஒற்றுமையை வலியுறுத்துகின்ற பொறுப புள்ள தலைவர்கள் இதையெல்லாம் சிந்தித்துப் பார்கக வேண்டும். வெறும் விருப்பங்களை உணர்ச்சி ததும்ப வெளிக் காட்டிக் கொள்வதால் காரியம் கைக்கூடுவதில்லை; குறையை நிவர்த்திக்க முயலவேண்டும்; துணிவுடன், குற்றம் கண்ட இடத்தில் அதைக் கண்டிக்க வேண்டும். அதை விடுத்து குற்றம் புரிபவனையும், அதனால் பாதிக்கப் படுபவனையும் ஒரே நிறையில் வைத்து, உபதேசம் புரிவதென்பது பயனற்றதோர் எளிய செயல். ★

"இந்தி இரண்டாம் பாடமொழிகளில் ஒன்றாக இருக்க வேண்டுமென்று கல்விமந்திரி அவசரப்பட்டே தீர்மானித்துவிட்டார்.... இந்தக் கல்விக் கொள்கை சிலரின் சுயநலத்தையும், வடநாட்டாரின் ஆதிக்கத்தையும் உள் நோக்கமாகக் கொண்டிருக்கிறது."

—டாக்டர் எ.கிருஷ்ணசாமி—1948

# 15. தீர்வு

குறிக்கோள் என்னவென்பதை ஏற்கனவே குறிப்பிட்டோம்; இந்தியத் தேசிய மொழிகள் அனைத்திற்கும் சமத்துவம் வேண்டும். இதை அடைவதெப்படி? இதற்கோர் இலட்சியத் தீர்வு (Ideal solution) வேண்டுமென்றால் இந்திய மொழிகள் அனைத்தும் இணைப்பு மொழிகளாகவும், மத்திய அரசின் ஆட்சிமொழிகளாகவும் ஆக வேண்டும். ஆனால் இத்தகைய இலட்சியத் தீர்வு இன்றைக்கு நடைமுறைச் சாத்தியமானதாக இல்லை. எதை எதையோ சாதிக்கும் அறிவியல் உலகு இதையும் ஒரு வேளை சாத்தியமாக்கினால் பெருமகிழ்வெய்தலாம். எந்த மொழியில் பேசப்பட்டாலும் அதை நாம் விரும்பும் மொழியில் சொல்லும் கருவியையும், எந்த மொழிக் கடிதத்தையும் நமக்குத் தெரியும் மொழியில் சரியாக உடன் மொழி பெயர்க்கும் எந்திரத்தையும் கண்டுபிடித்தால் மேற்கூறிய இலட்சியத் தீர்வு நடைமுறைச் சாத்தியமாகும்.

இன்றுள்ள ஏந்துகளைக் கொண்டு நம் சமத்துவக் குறிக்கோளை நிறைவு செய்யக் கூடியதும், இலட்சியத் தீர்வினை எட்டக்கூடியதுமான அடுத்த நல்ல ஒரு (the second best) தீர்வினை நாம் காண வேண்டும்

ஆங்கிலம் ஒழிந்த இந்தி மட்டுமே என்ற தீர்வும், இந்தியோடு ஆங்கிலமும் இணைமொழி என்ற தீர்வும் முறை கேடு பயப்பன என்பதை ஏற்கனவே கண்டோம். அநீதி எனக்கண்ட பின்பும் சிலர் இப்படிச் சொல்வார்கள்: 'தென்னிந்தியர்கள் கெட்டிக்காரர்கள், அறிவாளிகள்; அவர்கள் இந்தியை எளிதில் கற்று இந்திக்காரர்களையே

வென்று விடுவார்கள்? மேற்கண்டபடி இந்திமொழியினர் சொன்னால், அது 'ஏமாந்தவன் தலையில் பச்சை மிளகாய் அரைக்கும்' கெட்டிக்காரனின் வார்த்தை என்பதை அறிய வேண்டும். அதையே தென்னிந்தியன் சொன்னால் அதைச் சுத்த ஏமாளியின் வார்த்தையாக எண்ணவேண்டும். மனிதரில் அனைவருமே சமமான திறமை உள்ளவர்கள் தான். இந்தியாவின ஒரு பகுதியில் உள்ளோர் அத்தன்மையர் அல்ல என்று சொல்வதை 'வெட்டிப்பேச்சு' என்று தான் கூற வேண்டும்.

சிலர் இன்னொரு யோசனையைக் கூற முற்பட்டுள்ளனர்: 'இந்தியத் தேசிய மொழிகள் அனைத்தும் சம உரிமையை அடைவது தான் முறை; ஆனால் ஆங்கிலம் அந்நிய மொழியாகையால் அது இந்தியாவின் இணைப்பு மொழியாக ஆகமுடியாது; இந்திய மொழிகளில் ஒன்று அந்த இடத்தை நிரம்ப வேண்டும்; ஆனால் சட்டத்தின் மூலம் ஒரு மொழி திணிக்கப்படுவதை எதிர்க்கிறோம்; அந்த இடத்தை நிரப்புவது எந்த மொழி என்பது காலப்போக்கில் தானாக நிர்ணயமாக வேண்டும்', இப்படிச் சொல்வது பிரச்சனையைத் தள்ளிப்போட முயல்வது மட்டுமல்ல, அதைத் தீர்ப்பதற்கு பதிலாகத் தவிர்க்க முயல்வதுமாகும். செய்ய வேண்டியதைக் கிடப்பில் போடுவதோ, செய்யாமல் விடுவதோ ஊறுவிளைவிப்பதாகும்; அதுமட்டுமல்ல, இவர்கள் யோசனைப்படி இந்திய மொழிகளில் ஒன்று எதிர்காலத்தில் மத்திய அரசின் ஆட்சி மொழியாகும். அச்சமயத்தில் அந்த ஒரு மொழி தவிர்த்த மற்ற மொழியினரைக் குறை மட்டத்தில் வைப்பதாகத் தானே பொருள்? எந்தக் காரணத்திற்காக இன்றைய ஆட்சி மொழிக் கொள்கையை எதிர்க்கிறோமோ அதே காரணத்திற்காக, சமவாய்ப்பு புறக்கணிக்கப்படும் என்பதற்காக, இந்தப் புதிய யோசனையையும் எதிர்க்கிறோம்.

நடுவண் அரசின் ஆட்சி மொழியாக இந்தியை முழு அளவில் விரைவாகக் கொண்டுவர விரும்பிய திரு. சேத்-

கோவிந்ததாஸ் மற்றுமொரு யோசனையைச் சொன்னார். சுவிட்சர்லாந்து, கனடா ஆகிய நாடுகளில் உள்ளது போல் ஒன்றுக்கு மேற்பட்ட அலுவல் மொழிகளை வைத்துக் கொள்வோம். இந்தியோடு மற்றுமொரு தென்னிந்திய மொழியோ அல்லது வங்காளியோ ஆட்சி மொழியாக ஆகலாம். இந்த யோசனை, பிரச்சனையைக் குழப்புவதற்கு உதவும். தீர்க்க உதவாது. மேலும் இந்தி ஏகாதிபத்தியத்தை எதிர்க்க உருவாகி வரும் இந்தி மொழியினர் அல்லாதோரின் ஒன்று திரளும் அணியை உடைக்க முயலும் சூழ்ச்சியே இது. இந்தியோடு எந்த மொழி கூட்டுச் சேருவது என்ற போட்டியில் தமிழரும், வங்காளியரும் பகைத்துக் கொண்டால், அது இந்தி ஏகாதிபத்தியத்திற்குத்தானே இலாபம், ஏகாதிபத்திய வாதிகள் எப்பொழுதும் கையாள முயலும் பிரித்தாளும் (Divide and rule) தந்திரத்தை திரு. சேத்கோவிந்ததாஸ் கூறிப் போந்ததில் ஆச்சரியம் ஒன்றுமில்லை.

சரி, அவர் சொல்லியது போன்றே இந்தியும், தமிழும் ஆட்சி மொழிகள் ஆகின்றன என வைத்துக் கொள்வோம். அதனால், இந்திக்காரர்களுக்கும், தமிழருக்கும் தானே இலாபம்; மற்றவருக்கு என்ன பயன்? மற்றவர் இரண்டாந்தரக் குடிமக்களாகத் தானே போய் விடுவர்? காலம் சென்ற திரு. சேத்கோவிந்ததாஸ் அவர்களைப் பின்பற்றுவோர் ஒன்றை நன்கு புரிந்து கொள்வது நலம்; நம்முடைய இந்தி எதிர்ப்பு, அந்த மொழியின் பால் வெறுப்புக் கொண்டிருப்பதால் ஏற்பட்டதல்ல; இன்றைய ஆட்சி மொழிக் கொள்கையின் காரணமாக இந்தி மொழியினர் அல்லாதார் மொழி ஆதிக்கத்திற்கு ஆட்படநேரும் என்ற உண்மையான அச்சத்தின் காரணமாக எழுந்த ஒன்றே.

இந்நாட்டின் தேசிய மொழிகளில் ஒன்றாகிய இந்திக்கு அளிக்கப்படும் இடமும் நிலையும் நம் மொழிக்கும் வேண்டுகிறோம். அதே போல், நடுவண் அரசு மட்டத்தில் நமது மொழிக்கு நாம் கோரும் உரிமையை மற்ற எல்லா மொழி

களுக்கும் அளிக்கப்படுவதை வரவேற்கிறோம், இதுவே மொழிச் சிக்கலைத் தீர்ப்பதற்கான கொள்கை அடிப்படை.

**ஆங்கிலம் :** ஆங்கிலத்தை மட்டுமே இணைப்பு மொழியாக, நடுவண் அரசின் ஆட்சி மொழியாக வைத்துக்கொண்டால் என்ன? ஆங்கிலம் அந்நிய மொழி எனலாம். ஆனால் இந்தியாவில் ஒரு மொழிப் பிரிவினருக்கு மற்ற மொழிகள் ஆங்கிலத்தை விட அந்நிய மொழிகள் என்பதை ஏற்கனவே கண்டோம். ஆகையால் ஆங்கிலம் வேற்று மொழி என்பதைத் திரும்பத் திரும்பச் சொல்வது தெளிவற்ற உணர்வு நிலை (Sentimental) நோக்கே அன்றி அறிவின் நோக்கு (objective out look) அன்று.

மேலும், மொழி இரண்டு கூறுகளைக் கொண்டது; ஒன்று, தாய்மொழி என்ற தகுதியால் இயற்கையாக மன மகிழ்வையும், உள அமைதியையும் ஆன்ம வளர்ச்சியையும் கொடுக்கக் கூடிய நிலை, நம்மைப் பொறுத்தவரை தமிழ் மட்டுமே அத்தகைய பயனைக் கொடுக்க முடியும். மற்ற மொழியினருக்கு அவரவர் மொழி அவ்வண்ணமே இரண்டாவதாக ஒரு கருவி என்ற நிலையில் எண்ணங்களின் பரிமாற்றத்திற்கும், அறிவின் வளர்ச்சிக்கும் மொழியைப் பயன்படுத்தலாம். இப்படிப்பட்ட பயனுக்குக் கூடத் தாய் மொழியே சாலச் சிறந்தது; அதன் காரணமாகத்தான் உயர்கல்வி வரை தாய்மொழியிலேயே கற்கவேண்டிய நிலை விரைவில் வர வேண்டுமென்று ஏற்கனவே கண்டோம். ஆனால் தேவைப்படும் பொழுதும், வேறு வழியில்லை என்ற நிலையிலும் ஒரு கருவி என்ற அளவிற்கு அந்நிய மொழியைப் பயன்படுத்துவதில் எவ்விதத் தவறும் இல்லை; இழுக்கும் அல்ல. மற்ற நாட்டுக் கருவிகளை நாம் பயன்படுத்துவதில்லையா?

இந்திய மொழிகளில் ஒன்றோ அல்லது இரண்டோ பொது மொழியாவதன் மூலம் மற்ற மொழி பேசுவோர் அநீதிக்கு ஆட்படுகின்றனர்; இந்த நிலையில் வேறு வழியின்றி ஆங்கிலத்தை நாம் ஒரு நடுநிலை மொழியாக (neutra

language) ஏற்கவேண்டிய அவசியத்தில் உள்ளோம். அது பொது மொழியாவதன் மூலம் பாரபட்சம் காட்டப்படுவதில்லை; ஏற்றத் தாழ்வுகள் ஏற்படுவதில்லை.

மேலும், அதையேன் முற்றிலும் அந்நிய மொழியெனல் வேண்டும், நம் நாட்டு மக்களில் ஆங்கிலோ இந்தியர் உண்டு அவர்களின் தாய்மொழி ஆங்கிலம் தானே? இந்திய மொழிகளைச்கூறும் எட்டாவது பட்டியலில் அதையும் தாராளமாகச் சேர்க்கலாம். ஆங்கிலோ இந்தியர் நம்மீது குதிரை ஏறிக்கொள்ள மாட்டார்களா எனலாம். நிச்சயம் முடியாது. அவர்கள் மிகச்சிறிய தொகையினர்; சிதறுண்டு வாழ்வோர். அரசியல், நிர்வாகப் பொருளாதாரத் துறைகளில் மொழியின் மூலம், சிதறுண்ட அச்சிறு தொகையினர் ஆதிக்கம் பெற்று விடுவார்கள் என வாதிட்டால் அது சிறுபிள்ளைத்தனமாகும்.

ஆங்கிலத்தை எதிர்ப்பதற்கு இன்னுமொரு காரணத்தைக் கூறுகிறார்கள். அஃது இந்தியாவில் மிகச் சொற்ப மக்களால் மட்டுமே அறியப்பட்ட மொழி; குடியாட்சி அமைப்பில் மக்கள் மொழியாக அதை ஏற்க முடியாது. இந்தி அப்படியல்ல; அது பொதுமக்கள் மொழி; ஆகையால் அதுதான் வேண்டும். யாருக்கு இந்தி "மக்கள்" மொழி? உத்திரப் பிரதேசம், ஹரியானா, மத்திய பிரதேசம், ராஜஸ்தான், இமாசலபிரதேசம் ஆகிய மா நிலத்தாருக்குத் தானே? ஆங்கிலத்தைப் பொறுத்த வரை அஃது எந்த மா நிலத்தாருக்கும் "மக்கள்" மொழி அல்லவாயினும், எல்லா மாநிலத்தாருக்கும் "கற்றோர்" மொழி. ஆகையால் மாநில ஆட்சிக்குத் தாய்மொழியே சிறந்தது; மத்திய ஆட்சிக்கும், இணைப்பிற்கும் ஆங்கிலமே உகந்தது. கல்வி பரவும் பொழுது ஆங்கிலம் அறிந்தோர், அறியாதோர் ஆகியோரிடை வேறுபாடு மறையும். ஆங்கில அறிவு பெறுவதைப் பொருத்த மட்டில் அனைவருக்கும் சமமான சுமைதான்: ஆனால், இந்திமொழி ஒருவருக்குச் சுமை-; மற்றவருக்குச் சலுகை.

'பார்த்தீர்களா! ஆங்கிலம் சுமை என்பதை நீங்களே ஒத்துக்கொண்டீர்கள் அல்லவா?' என்பீர். ஆமாம்! சுமை தான். அந்தச் சுமை இந்திய ஒன்றுமைக்கு நாம் கொடுக்க வேண்டிய விலை. ஒற்றுமை வேண்டுவோர் அவ்விலையைக் கொடுத்தே தீர வேண்டும்.

இந்தக் கட்டத்தில் ஒன்றை நினைவு கூர வேண்டும். ஆங்கிலம் ஏன் இந்தியாவின் பொது மொழியாக வேண்டும் என்ற அடிப்படைக் காரணத்தைக் கண்டோம். எல்லா மொழி பேசுவோரையும் சமநிலையில் வைக்கும் "நடுநிலை" மொழி ஆங்கிலம் என்பது தான் அந்தக் காரணம். அந்தவகையில் நாம் ஆங்கிலத்தை ஏற்றுக் கொள்வதால் நமக்கு மற்ற பயன்களும் உள. ஆங்கில வெறுப்புக் கொண்டவர்கள் கூட அகில உலகத் தொடர்பிற்கு அம்மொழி வேண்டும் என்கின்றனர். அஃது ஓர் உலக மொழி, ஆதலால் அஃது உள்நாட்டு இணைப்பு மொழியாகவும், அயல்நாட்டுத் தொடர்பு மொழியாகவும் பயன்படும். ஒரே கல்லில் இரண்டு கனிகள்.

இன்னொரு நன்மையும் உண்டு. இந்திய மொழிகளில் எவையும் இன்றைய நிலையில் ஆங்கிலம் போல் வளர்ந்த மொழிகள் அல்ல. அவை வளர்வதற்குத் துணை தேவை. அந்தத் துணை ஆங்கிலமாகவோ, ஜெர்மனியாகவோ, ஃபிரன்சாகவோ, உருசியனாகவோ இருக்கலாம். ஆனால் இந்தியருக்கு எது இலாபம்? ஆங்கிலம் தானே? வேகமாக முன்னேறி வரும் உலகில் மிக வளர்ந்துள்ள மொழியின் துணையை ஏற்றுக் கொள்வதுதான் அறிவுடமை. சமுதாயத்தின் வளர்ச்சியிலும், நலத்திலும் அக்கறை கொண்டோர் இந்த உண்மையை எளிதில் உணர்வர்.

உள்நாட்டு இணைப்பு மொழியாகவும், அயல் நாட்டுத் தொடர்பு மொழியாகவும், தாய்மொழி வளர்ச்சிக்கும், அறிவுப் பெருக்கத்திற்கும் துணைமொழியாகவும் அமைந்து

பெரும்பயன் அளிக்கவல்ல ஆங்கிலத்தின் மேல் சிலருக்கு வெறுப்பும் இன்னும் சிலருக்கு அச்சமும் ஏன் ?

கல்வி, நிர்வாகம், அரசியல், தொழில், வணிகம் ஆகிய அனைத்துத் துறைகளிலும் மேல் மட்டத்திலிருந்து கீழ்மட்டம் வரை இதுவரை ஆங்கிலம் ஆதிக்கம் பெற்றிருந்த காரணத்தால் - அளவிற்கு மீறிச் செல்வாக்குப் பெற்றிருந்ததால்- அதன் மீது பொதுமக்கள் வெறுப்புக் கொண்டதியற்கை. தாய்மொழி கூட நன்கு கற்றறியாத பாமரர்க்கு ஆங்கிலத்தின் ''பிடி'' பெரும் தடையாக அமைந்து விட்டது, இந்த நிலை மாற வேண்டுமென்ற போக்கு மிகவும் வரவேற்கப்பட வேண்டிய ஒன்று.

உயர்மட்டம் வரையில் தாய்மொழியில் அனைத்துப் பாடங்களும் கற்பதற்கான ஏற்பாடு விரைவில் அமைய வேண்டும்.

நிர்வாகத் துறையில் மிக உயர்ந்த உத்தியோகங்கள் கூடத் தாய்மொழி மூலம் தேர்வெழுதுவதால் கிட்டக் கூடியனவாக ஏற்பட வேண்டும். அரசியலில் பெரும் பதவிகள் அடையத் தாய்மொழியே போதுமானதாக அமைய வேண்டும். சட்டசபையில் மட்டுமின்றி பாராளுமன்றத்திலும் தாய்மொழியில் பேசச் சிறு தடையும் கூடாது. தொழில் வணிகத்துறைகளிலும் தாய்மொழிக்கே முதலிடம் தரப்படல் வேண்டும். கீழ் மட்டத்திலிருந்து உயர்நீதி மன்றம்வரை நீதிமன்றங்களின் அனைத்து நடவடிக்கைகளும் அந்தந்த மாநில மொழிகளிலேயே நடத்தப்பட வேண்டும். இது போன்ற நடவடிக்கைகள் மூலம் குடியரசுக் கோட்பாட்டிற்கு உகந்த வண்ணம் தாய்மொழி மூலம் பொதுமக்களின் சமூகத் தேவைகள் நிறைவு செய்யப்படுமெனின், இணைப்பு மொழியாகவும், அறிவின் வளர்ச்சிக்குத் துணை மொழியாகவும் மட்டுமே உதவ வந்த ஆங்கிலத்தை ஒதுக்கித் தள்ள வேண்டுமென்ற எண்ணம் தோன்றாது.

வசதியுள்ள சிலருக்காக நடத்தப்படும் ஆங்கிலப் பயிற்று மொழிப் பள்ளிகளையும்(English medium schools) தாய் மொழிப் பள்ளிகளாக மாற்றி, ஆங்கில அறிவு பெறும் வாய்ப்பினை அனைவருக்கும் சமமானதாக்க வேண்டும். பிறமாநிலத்தார்க்கு மட்டும் முக்கிய நகர்களில் ஆங்கிலப் பயிற்றுமொழிப் பள்ளிகள் அனுமதிக்கப்படலாம். இதுநாள் வரை, அளவில் மீறிய வகையில் பயன்படுத்தப்பட்டு ஆதிக்கக் கருவியாக இருந்த அளவில் ஆங்கிலம் வெறுக்கப் படுவதைப் புரிந்து கொள்ளலாம். ஆனால், இந்தியாவை ஒன்றாக இணைக்கப் பயன்பட்ட, இந்திய தேசிய இனங் களிடையே மறுமலர்ச்சி ஏற்பட உதவிய ஆங்கிலத்தின் மீது; காழ்ப்புக் கொண்டு ஒதுக்குவது தவறான செயலாகும். இனிமேலும் இணைப்பு மொழியாகவும், அறிவின்வளர்ச்சிக்கு துணை மொழியாகவும் பயன்படக் கூடிய ஆங்கிலத்தைப் புறக்கணிக்க முயல்வது மடமை. ★



மொழிப் பிரச்சனை என்பது சாதாரணப் பிரச்சனை அல்லவே! அரசியல், பொரு ளாதாரம், சமூகம், கல்வி' கௌரவம், பண்பாடு என்று அத்தனையிலும் இழை யோடுகிற உயிர்ப்பிரச்சனை அல்லவா? இதற்காகச் சட்டத்தைத் திருத்துவது என்பது ஒன்றும் பாதகமான காரியம் அல்லவே! உறுதிமொழிகள், நம்பிக்கை உரைகள், ஒரு பெரிய சமுதாயத்தைக் காப்பாற்றும் என்று எந்த ஏமாளியும் நம்ப மாட்டான்.

— தமிழக முதல்வர் எம். ஜி. ராமச்சந்திரன். 18-8-1963.

'' ஒரு மொழி ஆதிக்கத்தால் இன்னொரு மொழி அழியும் என்பது நடைமுறை உண்மை. மொழி கருவி மட்டுமல்ல' அஃது ஒரு பெட்டகம்; ஓர் இனத்தின் கலாச்சாரத்தின் பிரதி-பலிப்பு. மொழி இல்லாவிட்டால் இனம் இல்லையே! '

— பெரியார் பேருரையாளர் முனைவர் மா. நன்னன்.

# 16. இரு மொழியா - மும்மொழியா?

தமிழகப் பள்ளிகளில் தமிழ்-ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளே போதுமென்ற விழுமிய முடிவை அறிஞர் அண்ணாவின் அமைச்சு 1968இல் எடுத்தது. ஆனால் மையஅரசுப் பாடத் திட்டப்படி பள்ளிகளைத் தொடங்கியும் 1976 இல் நடந்த நெருக்கடிநிலை ஆட்சியில் மாநிலப் பட்டியலிலிருந்து பொதுப் பட்டியலுக்குக் கல்வித் துறையை மாற்றியும், 1986இல் புதிய கல்வித்திட்டத்தை நுழைத்தும், மும்மொழித் திட்டத்தின் பெயரால் பள்ளிகளில் மறைமுகமாக இந்தியைத் திணிக்கும் நஞ்சனைய வஞ்சக நடப்பை டெல்லி அரசு மேற்கொள்வது. மக்கள் நலனை மதியாத அதன் ஏகாதிபத்தியப் போக்கையே காட்டுகிறது,

ஊராட்சி மன்றத்திலிருந்து பாராளுமன்றம் வரை ஒரு மொழியே போதும் என்பது இந்திக்காரருக்குச் சட்டம்; ஆனால் மற்றவருக்கு மும்மொழித்திட்டம். நியாயம், குடியரசு என்பவை டெல்லி ஆதிக்கத்தில் மிதிபட்டு நசுங்குகின்றன!

மாநில மொழி, ஆங்கிலம் என இரண்டைக் கொண்டு ஊரோடும் உலகோடும் உறவாட முடியும். மேற்கொண்டு இன்னொரு மொழியைக் கல்விக்கூடங்களில் நுழைப்பது பாமர மக்களையும் படிக்கும் சிறார்களையும் வாட்டியெடுக்கும் கொடுமையே!

தகுந்த சூழலும் தேவையும் விருப்பமும் உள்ள சிலர் இரண்டுக்கு மேற்பட்ட மொழிகளைப் பயில்வதை வேண்டாம் என்பதில்லை. அப்படிப் பயிலும் மொழி இந்தியாகத்

தான் இருக்க வேண்டும் என்பதுவும் இல்லை. இந்திய மொழிகளில் ஏதேனும் ஒன்றையோ. அல்லது வேற்று நாட்டு மொழிகளான ஜெர்மன், ஃபிரன்சு, உருசியம், சீனம் இசுபானியம் முதலியவற்றில் ஒன்றையோ பயிலலாம். ஒலி-ஒளி பதிவான்கள், அஞ்சல்வழிப் பயிற்சி, அறிவியல் வழியிலான எளிய கற்பிக்கும் முறை முதலியன பெருகி வரும் இக்காலத்தில், இருமொழிகளில் முறைசார் (formal) பயிற்சி பெற்றபின், தேவைப்படும் சிலர் மற்ற மொழிகளை முறைசாரா (non - formal) வகையில் கற்பது எளிதே!

பணி அல்லது வாணிகத்தின் பொருட்டு ஒரிசா செல்ல நேர்ந்தால், சில மாதங்களில் ஒரியா கற்கலாம். தென் அமெரிக்க நாடுகளுக்குச் செல்ல நேரிட்டால், அங்குள்ளோரின் இசுபானிய மொழியைப் பயிலலாம். ஆகையால் படிக்காத பாமரர்கள் நிறைந்த வளர்ந்துவரும் ஏழை நாட்டில். மூன்றாவது மொழியைக் கல்விக் கூடங்களில் நுழைத்து மாணவர்களைக் கசக்கிப் பிழிவது பெருங்கேடு பயக்கும் பொறுப்பற்ற செயலாகும்.

வட இந்தியப் பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் தென்னிந்திய மொழிகள் கற்கப்படும் நிலையைப் பற்றி, இந்திய திராவிட மொழியியல் கழகத்தார் திருவனந்தபுரத்தில் வெளியிட்ட அறிக்கையின் சுருக்கம், ஆங்கில நாளேடான 'இந்து' வில் 10 - 11 - 1977-ஆம் நாள் வெளியானது, வட இந்தியாவில் மும்மொழிக் கொள்கை தோற்றுவிட்ட தென்றும், அங்குத் தென்னிந்திய மொழிகளைக் கற்க ஆர்வமேயில்லை யென்றும் அவ்வறிக்கை கூறுகிறது. அதோடு, வங்காளியரும், மராத்தியரும், பஞ்சாபியரும் தங்கள் மொழிகள் தென்னிந்தியப் பல்கலைக் கழகங்களால் புறக்கணிக்கப் படுகிறதென்ற பெருங்குறையை எழுப்புகிறார்கள் என்றும் அவ்வறிக்கை சுட்டுகிறது. திராவிட மொழியியல் கழகத்தாரின் இந்தக் கண்டுபிடிப்பு நமக்கு வியப்பைத் தரவில்லை அரசியல் சட்டம் இந்தி மொழிக்குத் தனியேற்றம் தருவதின் இயல்பான பின்விளைவுகள் தான் இவை. அரசியல்.

ர்நிவாகத் துறைகளில் மொழிச் சமத்துவத்தை இழந்தபின், கல்வித் துறையில் மட்டும் அதைப் பெற விழைவது, 'தும்பை விட்டபின் வாலைப் பிடிக்க முயலும்' செயலன்றி வேறென்ன? குறைவும் தாழ்வும் நுழைவதற்கான முதற் காரணத்தைக் காண்பதற்கான தெளிவும், கண்டபின் அதைக் கல்லி எறிவதற் கான முயற்சியிலீடுபடுத்தும் நெஞ்சுரமும் நமக்கு வேண்டும்.★

''விருப்ப பாடம் என்பதற்கும், கட்டாயப் பாடம் என்பதற்கும் அதிக வேற்றுமை இல்லை, நடைமுறையில் ஒன்றுதான். சர்க்கார் உத்தியோகத்திற்கு இந்தி அவசியம் என்று கூறிவிட்ட பிறகு எந்தப் பெற்றோராவது இந்தி யைப் படிக்க வேண்டாமென்று தங்கள் பிள்ளைகளுக்குச் சொல்வார்களா?...இந்தியைத் தமிழ் போன்ற மொழிகள் மீது திணிக்கும் பாசிச மனப்பான்மை இருக்கக்கூடாது. இந்தியை மட்டுமல்ல, எந்த மொழியையும் அதற்கு எத்தனை விசேஷ குணங்களோ, மதிப்போ இருந்த போதிலுஞ்சரி, அதைப் பிற மக்கள் மீது திணிப்பதென்பது பெருந்தவறாகும்.'' —நாரண துரைக்கண்ணன்—1948

'' தமிழில் பண்பட்ட தமிழன் நாக்கு இந்தியை ஏற்கவே ஏற்காது... செழுந் தமிழ்ப் பயிரிடை களையென முளைத்து நிற்கும் இக் கட்டாய இந்தியை ஒழித்தே தீருவோம்... கருப்புச் சட்டை, கதர்ச் சட்டை, காவிச்சட்டை, கால் சட்டை —எச்சட்டை போட்டிருந்தாலும் தமிழன் என்ற உடல் சட்டை யோடு பிறந்துள்ள தமிழர்கள் அத்தனை பேரும் தமிழைக் காக்கக் கடமைப்பட்டவர்கள்தான்... தமிழரின் பண்பும், வரலாறும், அரசும் வடநாட்டுக்கு முற்றிலும் மாறுபட்டவை. ஆகவே, வட நாட்டு மொழியான இந்திக்கு இங்கு ஒருக்காலும் இடம் அளிக்க முடியாது. இஷ்ட பாடமாகவும் இந்தி இருக்க-வேண்டிய எத்த அவசியமும் இல்லை.''

— ம. பொ சிவஞானம் - 1948.

## 17. நீங்களும் திணிக்காதீர்

மாநில மட்டத்தில் அந்தந்த மாநில மொழிகள் எல்லாக் காரியங்களுக்கும் முழுமையாகப் பயன்படுத்தப்பட வேண்டும்; மத்திய அரசாங்க மட்டத்தில் கூடியவரை மாநில மொழிகள் அனைத்தையும் பயன்படுத்த வேண்டும். தவிர்க்க முடியாத கட்டத்தில்- எல்லாத் தேசிய மொழி களையும் பயன்படுத்த இயலாத நடைமுறைச் சுக்கல் ஏற்படும் துறைகளில் - மத்திய ஆட்சி மொழியாகவும், இணைப்பு மொழியாகவும் ஆங்கிலத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும். இதுதான் நாம் கூறும் தீர்வு.

நமது தீர்வினை முன்வைப்பதற்கான நியாயங்களை ஏற்கனவே கண்டோம். மேலும் அதற்கான விளக்கங்கள் தேவையில்லை. இருப்பினும் சில அரசியல்வாதிகளின் அதிசயக் கூற்றொன்றினைக் கவனிப்போம். ''உங்கள் மீது இந்தி திணிக்கக்கூடாதென்றீர்: அதே போன்று எங்கள் மீதும் நீங்கள் ஆங்கிலத்தைத் திணிக்காதீர்.'' இந்தி ஏகாதிபத்தியவாதிகளின் விந்தை வாதங்களில் இஃதும் ஒன்று. அவர்களுடைய மற்ற கருத்துக்கள் முடிவுகள் போன்றே, இதுவும் நேரிய சிந்தனையின் பாற்பட்டதல்ல.

''திணித்தல்'' என்ற சொல் எந்தப் பொருளில் பயன்படுத்தப்படுகிறதென்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். பொதுவாக, விரும்பாதவர் மீது ஒரு சுமையை ஏற்றுவதைத் தான் திணித்தல் என்கிறோம். அதே சுமையை விரும்பி ஏற்றுக் கொண்டால், அது திணித்தல் ஆகாது. இந்தி மத்திய அரசாங்கத்தின் ஆட்சிமொழியாவதை நாம் விரும்பவில்லை, ஆகையால் இந்தித்திணிப்பை எதிர்ப்பதாக

சொல்கிறோம். இந்திக்காரரும் அவர்களின் தாள்பணிவோரும் ஆங்கிலம் ஆட்சிமொழியாவதை விரும்பவில்லை ஆகையால் ஆங்கிலத் திணிப்பு கூடாதென்கிறார்கள் மொழிச் சிக்கலுக்குச் செம்மையான தீர்வினைக்காண விரும்புவோர், மேற்குறித்த விருப்பங்களில் எது சரி, எது தவறு என்பதை அறிதல் நன்று. கன்னடத்தாருக்கும், வங்காளியருக்கும் ஆங்கிலம் தாய்மொழியன்று; இருப்பினும், தாங்களும் ஆங்கிலம் கற்று, மற்றவரும் அதைக் கற்க வேண்டுமென அவர்கள் விரும்புவதேன்? அதைத் தெரிந்து கொள்வதன் மூலம் தங்களுக்கும் நன்மையுண்டு, மற்றவருக்கும் நன்மையுண்டு எனக்கருதுவதால ஆங்கிலச் ''சுமையை'' அவர்கள் விரும்பி ஏற்கிறார்கள். ஆங்கிலத்தை இணைப்பு மொழியாக்கித் தாங்கள தனிச்சலுகை பெற வேண்டும் என்ற எண்ணமோ, அல்லது இந்திக்காரருக்குத் தங்களை விட அதிகச்சுமையை ஏற்ற வேண்டுமென்ற தீயநோக்கோ இந்திமொழியினரல்லாத எவருக்குமில்லை. ஆங்கிலம் இணைப்பு மொழி ஆவதன் மூலம் அப்படியொரு தனிச் சலுகையோ, பெரும் சுமையோ யாருக்கும் ஏற்படாது. ஆகையால் ஆங்கிலத்தை இணைப்பு மொழியாக ஆக்கக் கோருவோரின் கருத்து முற்றிலும் நியாயத்திற்கு உட்பட்டது.

இனி, ஆங்கிலம் வேண்டாமெனச் சொல்லி, இந்தியை இணைப்பு மொழி ஆக்க வேண்டுமென்போரின் விருப்பம் சரியானதாவெனப் பார்க்கவேண்டும். உத்திரப் பிரதேசம், பீகார், ஹரியானா, மத்தியப்பிரதேசம் முதலிய மாநிலங்களில் எல்லாக் காரியங்களுக்கும் இந்தி பயன்படுத்தப்பட வேண்டுமென அவர்கள் விரும்புவதை நாம் குறைகூற முடியாது. அஃது அவர்களுக்கு நன்மையே' ஆனால் மத்திய அரசோடும், நம்மோடும் தொடர்பு வைத்துக்கொள்ள அதே இந்தியைப் பயன்படுத்த முயல்வது தனிச்சலுகை கோருவதாகும். மேலும், நம்மையும் இந்தி மூலம் தொடர்பு வைத்துக்கொள்ளச் சொல்வது அவர்களுக்கு

இல்லாத மிகுதியான சுமையை நம்மீது ஏற்றுவதாகும். இவ்வாறு தனிச்சலுகையை ஒருசாரார்க்கும், மிகுந்த சுமையை மற்றவருக்கும் கொடுக்கக்கூடிய ஏற்பாட்டை விரும்புவது சரியா? சமத்துவ நெறியைப் போற்றுபவர்களும் நேரிய நோக்கு உடையவர்களும் அவ்விருப்பத்தை ஒதுக்கித் தள்ளுவர். சமத்துவத்தையும், நியாயத்தையும் புறக்கணித்துச் செய்யப்படும் எந்த ஒரு மொழித்தீர்வும் இந்தியாவில் நிலையான அமைதியை ஏற்படுத்தாது. மேலும், இந்தி மொழியினரின் வழியைப் பின்பற்றி, ஒவ்வொரு மாநிலத்தாரும் அவரவர் தேசிய மொழி மூலமே நடுவண் அரசோடு தொடர்பு வைத்துக் கொள்ள விரும்புவதைத் தடுக்க இயலாது. அதேபோல் ஒவ்வொரு மாநிலமும் அதனதன் மொழி மூலமே மற்ற மாநிலங்களுடன் தொடர்பு வைத்துக் கொள்ள முனையும்; இப்போக்கு குழப்பத்தில் முடியும்.

நியாயம், சமத்துவம் ஆகியவற்றைப் புறக்கணிப்பதாகவும் குழப்பத்தை ஏற்படுத்துவதாகவும் அமையும் எந்த ஓர் ஏற்பாடும் இந்தியத் தேசிய இனங்களிடையே பிளவினை ஏற்படுத்தும். இந்திய ஒற்றுமைக்குக் கேடு செய்யும். நாட்டின் ஒற்றுமையைக் குலைப்பவர் மீது நடவடிக்கை எடுப்பதற்காக இயற்றப் பட்டுள்ள சட்டத்தை மேற்கூறிய ஏற்பாட்டினை வலியுறுத்துபவர் மீது செலுத்த வேண்டும்.

இன்னொரு நிலையையும் காண்போம். சிறிய அளவிலோ; பெரிய அளவிலோ எல்லா மாநிலங்களிலும், ஏற்கனவே பரவியுள்ள மொழி ஆங்கிலம். ஆனால், இந்தியோ அதைத் தாய்மொழியாய் உடையவரிடையே மட்டும் புழக்கத்தில் உள்ள—சில மாநிலங்களோடு அடங்கிய மொழி. அதன் இலக்கியத்தை அறிவதற்கென மற்றவர் அதைக் கற்கும் நிலை இருக்கலாம். ஆனால், நீதி, நிர்வாக, வர்த்தக' அறிவுந்துறைகளில் ஆங்கிலத்தைப்போல் அது பரவலாகப் பயன்படுத்தப்படவில்லை. இந்த நிலையில், பரவாதிருக்கும்

இந்தியைப் புகுத்துவது தான் திணிப்பாகுமே தவிர, பரவியுள்ள ஆங்கிலத்தை வைத்துக் கொள்வது திணிப்பாகாது

மற்றொரு வாதத்தையும் சொல்வர், தங்கள் நாட்டின் இணைப்பு மொழியாக அந்நிய மொழி ஒன்றினை ஏற்றுள்ள நிலை உலகத்தில் வேறு எங்கேனும் உண்டா? இப்படிக் கேட்பர். எங்கேனும் இருந்தால் தான் நாம் ஏற்க வேண்டுமா? மற்றவர்களைப் பார்த்தா பாராளுமன்ற ஜனநாயகத்தை ஆங்கிலேயர் வளர்த்தனர்? இன்னொரு நாட்டில் ஏற்படட்டும் எனக் காத்திருந்த பின்னரா சுதந்திரம், சமத்துவம், ஜனநாயகம் என்ற கொள்கைகளுக்காக ஃபிரன்சுக்காரர்கள் புரட்சி செய்தார்கள்? வேற்று நாட்டினரைக் கண்டபின்பா செம்மையான கூட்டரசு அமைப்பை அய்க்கிய மாநில அமெரிக்க நாடு (U.S.A.) ஏற்றுள்ளது. உலகில் வேறு எங்கேனும் சோசியலிச அரசு ஏற்படட்டும் என லெனின் காத்திருந்திருந்தால் போல்சுவிக் புரட்சியும், சோவியத் நாடும் (U. S. S. R,) எப்படி ஏற்பட்டிருக்க முடியும்? மற்ற நாட்டினைக் கண்ட பின்பா நேரடி மக்களாட்சியையும் (direct democracy) பன்மை அமைச்சினையும் (plural executive) சுவிட்சர்லாந்து ஏற்றுள்ளது? அதேபோல் நமக்கு நல்லதெனத் தோன்றியதை நாம் செய்ய வேண்டும்; ஒற்றுமையைக் காப்பதற்கும். சமமான நிலையினை நல்கி இந்தியத் தேசிய இனங்களிடையே நல்லுறவை நிலை நாட்டுவதற்கும், திறமையான நிர்வாகம் நடப்பதற்கும்; முன்னேற்றத்தை விரைவுபடுத்துவதற்கும் எது உதவுமோ அதை நாம் ஏற்பதுதான் அறிவுடைமை, ஒன்றுபட்டு வரும் உலகில் நம்முடைய பரந்த உள்ளத்தைக் காட்ட அப்படிபட்ட செய்கைகள் தான் அடையாளம்.

இதையெல்லாம் விடுத்து, மலிவான வாதங்கள் செய்யும் அரசியல் கழைக் கூத்தாடிகளால் நாட்டிற்கு என்ன நன்மை? ★

"மனித உணர்ச்சியும் மான உணர்ச்சியும் போய் இந்த நாட்டில் எவனும் அரசியல் மேதையாய் உலவ வேண்டிய அவசியமில்லை... இந்தி ஏகாதிபத்தியத்தை நாம் ஏற்றுக் கொள்ள முடியாது. இதிலே நமக்கு உயிர் பெரிதல்ல! இந்தக் காலத்திலே வாழ்ந்திருந்த தமிழர்கள் கோட்டை விட்டுவிட்டார்கள் என்று, பல நூற்றாண்டுகளுக்குப் பின்னால் வருகின்ற மக்கள் நம்மீது பழிசுமத்தக்கூடிய நிலையிலே நாம் இந்த நேரத்தில் தவறு செய்துவிடக் கூடாது." — ஈ. வெ. கி. சம்பத் 13-10-1957இல் உரை; நூல் - 'இந்திப்போர்' (1960)

- "இந்தி மக்கள் கையில் ஆட்சியதிகாரமும் படையு மிருக்கின்றன. தமிழர்க்கு அவையில்லை. இந்நிலைமை யைப் பயன்படுத்திக் கொண்டே இந்தியார் தமிழரை மருட்டவும் வெருட்டவும் செய்கின்றனர். தமிழர் தமக்குத் தேவையில்லாததும் தமிழை நாளடைவில் வழக்கு வீழ்த்தற்கே புகுத்தப்படுவதுமான இந்தியை ஏற்றுக் கொள்ளின், ஏற்கெனவே வடமொழியால் நலிந்திருக்கும் தமிழ், மேலும் நலிந்தும் மெலிந்தும் திரிந்தும் சரிந்தும் நாளடைவில் தென் இந்தியாக மாறிவிடுவது திண்ணம்... இந்திக் கல்வியால் அலுவல் வாய்ப்பு மிகும் என்பது காட்டிக் கொடுப்பவரின் கட்டுச் செய்தியே இந்திக்கும் இந்திய ஒற்றுமைக்கும் எள்ளளவும் தொடர்பில்லை.... விடுதலை யடைந்தது ஆங்கில வாயிலாகவே யன்றி இந்தி வாயிலாகவன்று." —ஞா. தேவநேயப் பாவாணர்—நூல் "இந்தியால் தமிழ் எவ்வாறு கெடும்?" (1968)

"அரியானா காரனுக்கு பஞ்சாபி அந்நிய மொழி, பஞ்சாபிக்கு இந்தி அந்நிய மொழி என்றால் அங்கிருந்து இங்கே வெகுதூரத்தில் இருப்பவர்களுக்கு இந்தி சொந்த மொழியா?" — முஸ்லீம் லீக் தமிழ் மாநிலச் செயலாளர் பன்மொழிப் புலவர் அப்துல் லதீப், விடுதலை: 16-1-1987

# 18. இந்தி ஆதிக்க எதிர்ப்பு

அந்நிய ஆங்கிலேயரை வெளியேற்றித் தன்னாட்சியை நிறுவும் ஆசை காட்டி, பார்ப்பனிய மேல்சாதி — பனியா — இந்தி ஆதிக்கத்தை நிறுவும் மோசடியில் இந்தியத்தேசிய காங்கிரசுக் கட்சி வெற்றி பெற்றுவிட்டது. விடுதலை ஆர்வத்தில், ஆசை காட்டி மோசம் செய்யும் சூழ்ச்சியைப் பெரும்பான்மையர் தெரிந்து கொள்ளவில்லை; வெளுத்ததெல்லாம் பால் என நம்பினர். காந்தியடிகளின் தலைமையில் உரிமைப் போரில் 1919-இல் தீவிரமாக ஈடுபட்ட தந்தை பெரியார் இதற்கு விதி விலக்கு அல்லர். ஆகையால், ஈரோட்டில் அவருடைய வீட்டின் ஒரு பகுதியை இந்தி வகுப்பிற்கு ஒதுக்கித் தந்து படிப்போருக்கு ஈராண்டுகள் உதவியும் செய்தார்.

ஆனால், இந்தி நுழைப்பு அம்மொழி பேசாத பாமரர்களை என்றைக்கும் தாழ்நிலையில் வைத்துவிடும் என்பதைப் பெரியார் விரைவிலேயே தனது பட்டறிவால் உணர்ந்தார். அதைக் குறித்து 1926இல் குடியரசு இதழில் இவ்வாறு எழுதினார்; "இந்தி படித்த பிராமணர்களால் நமக்கு ஏற்படும் கெடுதியை நினைக்கும் பொழுது இதைப்பற்றி வருந்தாமலும், இந்திக்கு நாம் பாடுபட்ட முட்டாள் தனத்திற்கும், பணம் கொடுத்த பைத்தியக்காரத் தனத்திற்கும், வெட்கப்படாமலும் இருக்க முடியவில்லை. பிராமணரல்லாதாருக்கு ஏற்பட்ட பல ஆபத்துக்களில் இந்தியும் ஒன்றாய் முடியும் போலிருக்கிறது."

இந்திய தேசிய காங்கிரசுக் கட்சியின் செயலாளராக இருந்த ஆந்திர ரத்தின கோபால கிருஷ்ணமய்யா என்பவர்

1923இல் இவ்வாறு கூறினார் : '' கயா காங்கிரசில் (1923) எல்லாரும் இந்தியில்தான் சொல்மாரி பொழிந்தார்கள். ஆனால் இந்திக்கு முதலிடம் அளிப்பது நமது அடிமைத் தனத்தை வேறொரு உருவத்தில் நிலைநாட்டுவதாகவே முடியும் ''.
(மேற்கோள் : பேராசிரியர் மா. இளஞ்செழியன் — 'தமிழன் தொடுத்த போர் '.)

சாமி சிதம்பரனார் முன்மொழிய, எஸ். இராமநாதன் வழிமொழிந்த 1931— நன்னிலம் வட்டார சுயமரியாதை மாநாட்டின் தீர்மானம் இவ்வாறு கூறுகிறது : '' இந்தி, வடமொழி முதலிய மொழிகளை நமது மக்கள் படிக்கும்படி செய்வது பார்ப்பனியத்திற்கு மறைமுகமாக ஆக்கந் தேடுவதாகும். உலக மொழியாக விளங்கும் ஆங்கிலத்தையே தாய் மொழிக்கு அடுத்தபடியாக நமது இளைஞர்கள் கற்க வேண்டும் ''

1931 மே 10இல், ''இன்றைய தினம் இந்திய மக்களுக்கு, அவரவர்கள் சொந்த பாஷை தவிர வேறு பாஷை தெரிய வேண்டுமானால் அதை ஆங்கில பாஷை யென்றே சொல்லுவோம்...(உலகம் முழுதும் உள்ள பல) கோடி மக்களையும் சகோதரர்களாகப் பாவித்து வாழவேண்டிய நிலை ஏற்பட்டிருக்கும்போது உலகச் செலாவணி பாஷை எதுவோ அதை மனிதன் அறியாமல் இந்தி பாஷை எதற்குப் படிக்க வேண்டும் என்று கேட்கின்றோம், '' எனப் பெரியார் எழுதினார். இராமாநந்த சட்டர்ஜி எனும் வங்காள அறிஞர் இந்தி நுழைப்பை, மே 1931இல் கண்டித்து, மாடர்ன் ரிவ்யூ இதழில் எழுதினார்.

சென்னை மாநிலத்தில் சி. இராஜகோபாலாச்சாரி தலைமையில் ஜூலை 1937இல் முதல் காங்கிரசுக் கட்சி அரசு அமைந்தது. 10.8-37இல் இந்தியைப் பள்ளிகளில் கட்டாயப் பாடம் ஆக்கப் போவதாக முதல்வர் அறிவித்தார்.

இதைக் கண்டித்து 27-8-37இல் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தில் வேங்கடாசலம் பிள்ளை தலைமையில் நடந்தது. உமாமகேசு வரனார், ஜே. எம், சோமசுந்தரம் பிள்ளை, சிவ. குப்புசாமி பிள்ளை, கவியரசு ஆர். வெங்கடேசலனார் ஆகியோர் விளக்க உரையாற்றினர்.

26-12-1937இல் திருச்சிராப்பள்ளியில் சென்னை மாநிலத் தமிழர் மாநாட்டை தி. பொ. வேதாசலனார், கி. ஆ. பெ. விசுவநாதம் ஆகியோர் கூட்டினர். கா. சு. பிள்ளை அவர்களின் திறப்புரையும், தமிழவேள் உமா மகேசுவரனாரின் வரவேற்புரையும், நாவலர் சோமசுந்தர பாரதியாரின் தலைமையுரையும். தந்தை பெரியார் அவர்களின் வீர உரையும் நிகழ்ந்தன.

இதற்கு முன்னும் பின்னும் திருவையாறு, சென்னை, திருநெல்வேலி, சேலம், இராசிபுரம், ஆம்பூர், நாமக்கல், ஓமலூர், தஞ்சை, திருவத்திபுரம், மதுரை, சாக்கோட்டை, சோழவந்தான் முதலிய இடங்களில் வட்ட, மாவட்ட சுயமரியாதை மாநாடுகளும், தமிழர் மாநாடுகளும் நடத்தி இந்தி நுழைப்பைக் கண்டித்தனர். 3-1-1938இல் அருப்புக்கோட்டை தாழ்த்தப்பட்டோர் மாநாடும், 10-4-38இல் கோவை மாவட்ட முஸ்லீம் லீக் மாநாடும் இந்திக்கு எதிர்ப்புத் தெரிவித்தன. ஏற்கனவே குறிப்பிட்ட பெரியவர்களோடு, அறிஞர் அண்ணா, கே. எம். பாலசுப்பிரமணியம், மு. சி. பூர்ணலிங்கம் பிள்ளை, எம். என். நஞ்சையா, கான் பகதூர் கலிபுல்லா சாகிப், என். சிவராசஜ், பொன்னம்பலனார், சிறீதர சுவாமிகள், சுழந்தடிகள், சேலம் சித்தையன், மணவை திருமலைசாமி, குடந்தை நீலமேகம், மேடைதளவாய் குமாரசாமி முதலியார் சா. எ. டி பன்னீர்செல்வம், எஸ். முத்தையா, கரூர் எ. ஆர் சிவாநந்தம், சாமி. சிதம்பரனார், செ. தெ. நாயகம், நாகை. மணி. ஜி. பி. சோமசுந்தரம், கே. வி. அழகிரிசாமி முதலியவர்களும் வெவ்வேறு இடங்களில் தமிழ் உரிமைக்குக் குரல் கொடுத்தனர். அனைத்து இடங்களிலும் தந்தை பெரியார் உரை நிகழ்த்தினார், ஊக்கமும் ஆக்கமும் தந்தார்.

காஞ்சியில் அ.க. தங்கவேலர் முயற்சியில் 27-2-1938இல் இந்தி எதிர்ப்பு மாநாட்டை சர். எம். கிருஷ்ணன் நாயர் திறந்து வைத்தார். சர். பி. டி. ராஜன் கலந்து கொண்டார். தலைமை உரையாற்றிய சர். கே. வி. ரெட்டி நாயுடு கூறினார் : ''வேலை தேடிக்கொண்டு வடநாட்டிற்குச் செல்லும்போது இந்தி மொழியறிவு துணை செய்யும் என்பது வெறும் கோமாளிக் கூத்தாகும். ஏன், வடநாட்டில் படித்தவர்களிடை வேலையில்லாத் திண்டாட்டம் இல்லையா? தாய் மொழியைப் பாராட்டாதவன் காட்டிக் கொடுத்த துரோகியும் கோழையும் ஆவான்.''

காஞ்சிமாநாட்டில் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் படத்தைப் பெரியார் திறந்துவைத்து தெள்ளுரை பகன்றார்.

21-4-1938 இந்தி கட்டாய பாடம் என்று சென்னை அரசு அறிவித்தது. 28-5-38இல் திருச்சிப் பாசறை கூடி இந்தி எதிர்ப்பு வாரியத்தை உருவாக்கிற்று ; நாவலர் பாரதியார் - தலைவர், உறுப்பினர்கள் ; பெரியார், உமா மகேசுரனார், ஊ. பு. அ. சவுந்திரபாண்டியனார், கே. எம். பாலசுப்பிரமணியம், கி. ஆ. பெ. விசுவநாதம் – செயலாளர்.

மே1938இல் தொடர்ந்து நான்கு வாரங்கள் குடியரசுவில் கருத்தாழமும் உரிமையுணர்வும் கடமை உந்தலும் நிறைந்த கட்டுரைகளைப் பெரியார் எழுதினார் : 'இன்று நடப்பது பிரிடிஷ் ஆட்சி அல்ல, வருணாசிரமப் புரோகித ஆட்சியாகும். அதன் ஒவ்வொரு மூச்சும் தமிழ் மக்களை விலங்குகள் ஆக்குவதற்காக விடப்படும் மூச்சாகும். விலங்குகளாக வாழ்வதை விட உயிர்விடுவது மேலான காரியமாகும்,'' என அறிவுறுத்தினார்.

''சேனை ஒன்று தேவை—பெருஞ்சேனை ஒன்று தேவை—செந்தமிழைக் காப்பதற்குச் சேனை ஒன்று தேவை''—என்று தீட்டினார் பாரதிதாசன்.

3. 6. 1938 இல் மறைமலையடிகளார் தலைமையில் கோடம்பாக்கத்தில் இந்தி எதிர்ப்பு மாநாடு நடந்த பொழுது, இந்தியை எதிர்த்து முதலமைச்சர் வீட்டுமுன் உண்ணா நோன்பு இருந்த பல்லடம் பொன்னுசாமி கைது செய்யப்பட்டார். தியாகராய நகர் முதலமைச்சர் வீட்டிற்கு முன்பு மாநாட்டு மக்கள் ஊர்வலமாகச் சென்று திரண்டனர். காஞ்சி மணிமொழியார் பேசினார். முதல் சர்வாதிகாரி செ. தெ. நாயகம், சண்முகாநந்த அடிகள் ஆகியோர் கைது செய்யப்பட்டனர். முதல் இந்தி ஆதிக்க எதிர்ப்புப் போரில் 3.6.1938 இல் தொடங்கிய சிறைப் படுத்தம் 21. 2. 1940 இல் கட்டாய இந்தி ஏற்பாடு தொலையுமட்டும் தொடர்ந்தது. ஆண்களும் பெண்களும் சிறுவர்களுமாக மொத்தம் 1271 தமிழர் சிறையேகினர்.

ஈழத்து அடிகள், அருணகிரி அடிகள், டி.எ.வி. நாதன் கே. எம். பாலசுப்ரமணியம், மறை. திருநாவுக்கரசு தளபதி. அண்ணாதுரை, பாவலர் பாலசுந்தரம், அவர் துணைவியார் பட்டம்மாள், மறைமலையடிகளாரின் மருமகள்கள் ஞானம் அம்மையார், சரோசனி அம்மையார், ஆர். நாராயணி, மயிலை சிவ. முத்து அவர்களின் தமக்கையார் மலர்முகத்தம்மையார், புலவர் அருணகிரியாரின் துணைவியார் உண்ணாமுலையம்மையார், இரண்டு வயதுக் குழந்தை என். வி. என். சோமுவுடன் புவனேசுவரி அம்மையார், மூவாலூர் இராமாமிர்தத்து அம்மையார், டாக்டர் தருமாம்பாள், டி. வி. முருகேசன் துணைவியார் சிவசங்கரி, வீரன் தாளமுத்துவின் துணைவியார் குருலம்மாள், வ. சு. தேவசுந்தரத்தின் துணைவியார் சரோசினி அம்மையார், பல்லடம் பொன்னுசாமியின் துணைவியார் நாச்சியம்மாள், 13ஆவது சர்வாதிகாரியான நெல்லை புலவர் இராமநாதரின் துணைவியார் பொன்னம்மாள் முதலியவர்கள் மொழிப்போரில் சிறை சென்ற சிலர்.

செ. தெ. நாயகம். ஈழத்தடிகள், கே. எம். பாலசுப்பிரமணியம், ஜி. என். ராஜு, குழந்தை எஸ். கே. சாமி, எம். எஸ். மொய்தீன், புவனகிரி நமசிவாயம், சம்பந்தம் காஞ்சி பரவஸ்து ஆச்சாரியார், பெரியகுளம் அரங்கசாமி கந்தம் ரோசம்மையார், கோபி டி. என். மாரியம்மாள், நெல்லை புலவர் இராமநாதர் ஆகிய பதின்மூவர் அறப்போர் சர்வாதிகாரிகளாகத் திகழ்ந்து சிறைக்கு முந்தினர்.

1935 இல் இந்தியச் சட்ட சபையின் பலத்த எதிர்ப்புக்கு இடையே குற்றவியல் சட்டத்திருத்தத்தை நிறைவேற்றினர், தாங்கள் ஆட்சிக்கு வந்தால் அதை முதலில் ஒழிப்போம் எனக்காங்கிரசுக்காரர் கூறினர், ஆனால் அதே சட்டத்திருத்தத்தைக் கொண்டு 938 இல் ஆச்சாரியார் தமிழ் உரிமைப் போராளிகளை ஒடுக்கமுயன்றார். இந் நடவடிக்கையைச் சென்னை சட்டசபையில் எதிர்க்கட்சியினர் கண்டித்தனர். கவிஞர் இரவீந்திரநாத் தாகூர், ஜனாப் ஜின்னா, சர்.சிகந்தர் ஹயத்கான், டாக்டர் காரே —முதலியவர்களும் இந்தி எதிர்ப்பாளர்கள் மீது குற்றவியல் சட்டத் திருத்தத்தை ஏவுவது குடியரசு முறைக்கு முரண்பட்டது எனச் சுட்டிக் காட்டினர்.

உரிமை உணர்வைப் பரப்பிய விடுதலை ஏட்டின் பதிப்பாளர் ஈ' வெ. கிருஷ்ணசாமியும், அதன் ஆசிரியர் பெரியவர் பண்டித முத்துசாமியும் அக். 1938இல் கைது செய்யப்பட்டு சிறைத்தண்டனை பெற்றனர். இக்காலக் கட்டத்தில் அண்ணா விடுதலை ஆசிரியப் பொறுப்பு ஏற்றார்.

தமிழர் அறப்போர்ப் படையொன்று 1938 ஆகஸ்டு முதல் நாள் திருச்சியிலிருந்து சென்னை நோக்கிப் புறப்பட்டது. அதன் அமைச்சர் மணவை திருமலைசாமி, தலைவர் அய். குமாரசாமி பிள்ளை, பெருஞ்சோற்றுத் தலைவி மூவாலூர் இராமாமிர்தத்தம்மையார், தளபதி கே. வி. அழகிரிசாமி. சுமார் 600 கல் கடந்து 1938 செப். 11 இல்

சென்னை சேர்ந்த படைக்கு, மறைமலை அடிகளார் தலைமையில் கூடிய இரண்டு லட்சம் தமிழர்கள் வரவேற்பு நல்கினர். நாவலர் பாரதியார், திருத்தகு அருள்தங்கையா, வேலூர் ஷர்புதீன், திருப்பூர் மொய்தீன், காஞ்சி கலியாணசுந்தரம், தாமரைக்கண்ணியம்மை முதலியவர்களும் பெரியாரும் வாழ்த்தி உரையாற்றினர். படையைச் சேர்ந்த 40 பேர் மறியலில் ஈடுபட்டு செப்.16 இல் சிறை ஏகினர். என். பி. காளியப்பன், எஸ். எஸ். ஜோசப் ஆகியோர் கோவை மாவட்டப் படையொன்றைத் திரட்டி நடத்தினர்.

காரைக்குடியில் 4.12.1938 இல் நடந்த தமிழர் மாநாட்டைப் பன்னீர்செல்வம் திறந்து வைத்தார். தலைமைதாங்கிய நாவலர் பாரதியார், "ஓர் அந்நிய மொழியை நம்மவர் எல்லோருக்கும் பொதுமொழி யாக்குவது அவசியமா, நலம் தருமா?... தமிழ் ஆரியத்தால் கெட்டு மலையாளமானது போல், இந்தியால் நொந்து வடநாட்டுப் பெரியம்மை வார்த்து உருமாறும், இலக்கணக் கட்டழிந்து தட்டழியும். சுருங்கச் சொல்லின் தமிழ் தன் உயிர் இழந்து இந்தி மயமாக மாறும்.... சமுதாயம் தன் நிலைகுன்றிப் பிறிது நலமும் ஏற்க முடியாமல் நோவுற்று அழிவது உறுதி" என எச்சரித்தார். பெரியார் சிறப்புரையாற்றினார்.

1938 செப் 13இல், மீனாம்பாள் சிவராசு கொடியேற்றிய பண்டிதை நாரயணியம்மையார் வரவேற்ற, மறைமலையடிகளார் மகள் நீலாம்பிகை அம்மையார் தலைமை தாங்கிய பெண்கள் மாநாட்டில், ஈ. வெ. ராமசாமிக்குப் பெரியார் என்ற சிறப்புப் பெயரையே வழங்கவேண்டும் என்ற தீர்மானம் நிறைவேறிற்று. இந்தி எதிர்ப்பில் கலந்து கொள்ள அழைப்பு விடுத்துப் பெரியார் பேசினார். மறுநாள் 14 ஆம் தேதி முதல் பெண்களும் அறப்போரில் கலந்து சிறையேகினர்.

இம் மாநாட்டிலும், மறுநாள் மறியலிலும் பெண்களைச் சட்டமறுப்பிற்குத் தூண்டினார் என்ற குற்றச்சாட்டுகளின் பேரில் பெரியார் விசாரிக்கப்பட்டார். எதிர்வழக்காட மறுத்து, எவ்வளவு அதிகத் தண்டனை கொடுத்தாலும் ஏற்பதாகக் கூறி, இவ்வாறு உரைத்தார்: ''எவ்வளவு நியாயமான இலட்சியத்தை அடைய வேண்டுமானாலும் அதற்காகக் கஷ்ட நஷ்டங்களடைதல் என்பது விலை கொடுத்தே தீரவேணிடும்.'' 6.12.1983இல் பெரியாருக்கு ஒன்றரை ஆண்டு கடுங்காவல் தண்டனையை விதித்தனர். சுமார் அய்ந்து மாதங்கள் பெல்லாரி சிறையில் கொடிய வெப்பப் பருவத்தில் வைந்திருந்து, மே மாதத்தில் சென்னைக்கும் கோவைக்கும் மாற்றி, 167 நாட்களுக்-குப்பின் 22.5.1939இல் விடுவித்தனர்.

பெரியார் சிறை சென்றது குறித்து 'நவசக்தி'யில் தமிழ் மா முனிவர் திரு. வி. க. இவ்வாறு எழுதினார்; ''முன்னே அவர் ஒத்துழையாமையில் ஈடுபட்டும், தீண்டாமையை முன்னிட்டும், சமதர்மத்தைக் குறிக்கொண்டும் பலமுறை சிறை சென்றுள்ளார். இம்முறை இந்தி எதிர்ப்புக் காரணமாக சிறை நுழைந்திருக்கின்றார். சிறைக்கோட்டம் நாயக்கருக்கு ஒரு விதத் தவக்கோட்டம் ஆயது போலும்!''

சென்னையில், 1938 டிசம்பரில் கூடிய நீதிக் கட்சி மாநாட்டில், அக் கட்சியின் தலைவராகச் சிறையில் இருந்த பெரியார் தேர்ந்தெடுக்கப் பட்டார். பிப்ரவரி 1939இல் சேலத்தில் மறியல் செய்த பலர் சிறைப்பட்டனர்.

### தாளமுத்து — நடராசன்

பெரியார் சிறையில் இருந்த தருணத்தில், மொழி யுரிமைப் போரில் ஈடுபட்டுச் சிறை சென்ற தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சார்ந்த வீரர் நடராசன் 15-1-1939இல் காலமானார்.

ஆல்பர்ட் ஜேசுதாசன் தலைமையில் தளபதி அண்ணா, வேலூர் அண்ணல் தங்கோ மற்றும் பலர் இரங்கல் உரையாற்றினர். 12-3-1939இல் பிற்படுத்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த அறப்போர் வீரர் தாளமுத்து காலமானார். சி. பாசுதேவ் தலைமையில், அண்ணா ஆற்றிய உரையிது: ``என்னைப் பொருத்தவரை தோழர்கள் நடராசன், தாளமுத்து மரணத்தை என்னுடைய அண்ணன் தம்பி மரணம் என்றே கருதுகிறேன் இனி இந்தி படிக்கும் மாணவர்கள் இவ்விருவர் உடலைத் தாண்டியே படிக்கச் செல்ல வேண்டும். இரண்டு மணிகளை இழந்தோம். தமிழர் ஆட்சி ஏற்படும் போது இவ்விரு வீரர்களின் தியாகத்தை அடிப்படையாகக் கொண்டே அது எழுப்பப்படும். வருங்காலத்தில், விடுதலை பெற்ற தமிழகத்தில் தலைவர் பெரியாரை நடுவில் வைத்து இறந்த இரு மணிகளையும் பக்கத்தில் வைத்துச் சிலை எழுப்ப வேண்டும்.''

இரண்டாம் உலகப் போர் மூண்டதால் உருவான அரசியல் முரண்பாட்டால், ஆச்சாரியாரின் அமைச்சு 27-10-39 இல் பதவி விலகிற்று. அவர் ஆட்சியின் பொழுதும், அதற்குப் பின் கவர்னர் ஆட்சியிலும் அனைத்து அறப்போராளிகளும் விடுதலை ஆயினர். ஆனால் கட்டாய இந்தி ஒழியவில்லை. ஆகையால் 31-12-39இல் காஞ்சியிற் கூடிய உரிமை உணர்வினர், மீண்டும் போரை நடத்த, இரண்டாவது இந்தி எதிர்ப்பு வாரியத்தை ஏற்படுத்தினர். அதன் தலைவர் பெரியார், செயலாளர் அண்ணா. குமாரராஜா சர் முத்தையா, திருவொற்றியூர் சண்முகம், எம். தாமோதரம், நெடும்பலம் சாமியப்பா, பன்னீர் செல்வம், சவுந்தர பாண்டியன், நாவலர் பாரதியார், நாயகம், பாசுதேவ், நாதன், சாமி சண்முகாநந்தம், சாமி அருணகிரிநாதர், வி. பி. எஸ். மணியர், சுந்தம் ரோசம்மாள் ஆகியோர் உறுப்பினர்கள்.

ஜன. 1940இல் பம்பாய் சென்று, மராத்தியத் தலைவர் ஜாதவ், எம். ஆர். ஜெயகர், ஜின்னா, அம்பேத்கார் ஆகியோ

ரைக் கண்டு திரும்பிய பெரியார், பிப்ரவரி 18, 19ஆகிய நாட்களில் சென்னையில் நடந்த கூட்டங்களில், கவர்னருக்கு இறுதி எச்சரிக்கை விடுத்தார். பள்ளிகளில் இந்தி ஒழியவில்லையெனில் மீண்டும் கிளர்ச்சி என அறிவித்தார், 21-2-1940இல் கட்டாய இந்தி ஆணையைச் சென்னை அரசு நீக்கிவிட்டது. இந்தி எதிர்ப்புப்போரின் வெற்றியை வாழ்த்திப் பெரியாருக்கு ஜின்னா தந்தி கொடுத்தார்.

## தமிழ் நாடு — தமிழருக்கே!

தமிழா கேள் எனும் தலைப்பில் தளபதி அண்ணா 22.2.1940இல் எழுதிய 'விடுதலை' தலையங்கத்தின் ஒரு பகுதியிது: ''இந்தியாவில் இது வரை நடத்தப்பட்ட சத்தியாக்கிரகம் என்ற போராட்டத்தில் வெற்றிகண்டது இரு முறைகளில் தான். ஒன்று வைக்கத்தில்! மற்றொன்று இன்று! இரண்டிலும் பெரியார் ஈ.வெ.ராமசாமியே போர்க்களத்தில் சளையாது நின்றவர்... எதனால் வெற்றி பெற்றோம்? பஜாஜ், பிர்லாவாலா? பத்திரிகை பலத்தாலா? பிரச்சாரப் படை உண்டா? இல்லை. உறுதி, உழைப்பு, ஒன்றுபட்ட தன்மை, கட்டுப்பாடு இவைகளாலேயே நாம் பெற்றோம் வெற்றி. இன்று நாம் பெருமையுடன் "ஓடி வந்த இந்திப் பெண்ணே கேள், நீ தேடி வந்த கோழையுள்ள நாடு இது அல்லவே," என்று கூறுகிறோம். வந்த மங்கை பங்கமடைந்து போகிறாள் வெளியே... தமிழ் நாடு தமிழருக்ாகும் வரையில் நாம் போரிட்டுத்தான் தீரவேண்டும். எனவே தமிழரே, நீவிர் உமது பலத்தை உணர்ந்து, நில்லுங்கள் முன்னணியில், தொடுப்போம் போர், காண்போம் வெற்றி!''



## இரண்டாம் — இந்திப்போர்

1946 இல் நடந்த தேர்தலில், காங்கிரசுக் கட்சி வெற்றி பெற்று சென்னையில் ஆட்சிக்கு வந்தது. முதலில்

பிரகாசமும், பின்பு மார்ச் 1947இல் ஓமந்தூர் இராமசாமி ரெட்டியாரும் முதலமைச்சர்கள் ஆயினர், கல்வியமைச்சராக இருந்த அவினாசிலிங்கம் அவர்கள் இந்தியை கட்டாய பாடமாக்கினார். ஆகையால் 10.8.48 முதல் பெரியார் மீண்டும் கிளர்ச்சியைத்தொடங்கினார். இந்திஎதிர்ப்பாளர் மாநாடுகளைக் கூட்டினார். மறைமலையடிகளார் தலைமையில், திரு.வி.க., அருணகிரியடிகள். ம.பொ. சி., டி. செங்கல்வராயன், நாரணதுரைக் கண்ணன், அருள் தங்கையா, அப்துல் மஜீத், டாக்டர் எ.கிருஷ்ணசாமி வி. ராமசாமி, முன்னாள் மேயர் ராதாகிருஷ்ணப்பிள்ளை கி.ஆ.பெ. விசுவநாதம் முதலிய திராவிடர் கழகம் சாராத தமிழ்ப் பற்றாளர்களையும் பங்கேற்கச் செய்தார்.

அறிஞர் அண்ணா தளபதியாகப் பணியாற்றினர் டி.எம். பார்த்தசாரதி, அலமேலு அப்பாதுரை முதலியோர் முக்கியப் பங்கேற்றனர். நாள் தோறும் மறியல் நடந்தது பலஊர்களில் சிறைப்படுத்தமும், அடக்குமுறையும் தொடர்ந்தன. 1948 ஆக. 2?இல் பெரியாரும் அண்ணாவும் கைதாயினர். 14.9.48இல் அய்தராபாத் நடவடிக்கையின் காரணமாக கிளர்ச்சியைத் தள்ளி வைத்தனர். இருப்பினும், செப் 15இல் ஒருநாள் மறியல் நடந்தது. அன்று திருமணம் செய்து கொண்ட கலைஞர் கருணாநிதி அதில் கலந்து கொண்டார். குடந்தையில். டிச. 18இல் பெரியார் 10 ஆம் முறை கைதானார். மறுநாள் அவ்வூரில் காவலர் அடக்குமுறை எல்லை மீறிற்று. 59 நாட்கள் நடந்தபின் இரண்டாவது இந்தி எதிர்ப்பு அறப்போர் நின்றது. இந்தி கட்டாய பாடம் என்பது ஒழிநதது.

மாதவமேனன் கல்வியமைச்சராக 1950 இல் வந்தார்: இந்தியைக் கட்டாய பாடமாக்கினார். தமிழகம் எதிர்த்தது; அதே ஆண்டு திணிப்பு நின்றது. ஆயிரத்திற்கும் மேலான தி.மு.க. தொண்டர்கள் சிறைப்பட்ட பின்பும், இருவர் மாண்டபின்பும் இவ் வெற்றி கிட்டியது.

1952 ஆக. 1இல் இரயில் நிலையங்களில் இந்தி எழுத்துக்கள் அழிக்கப்பட்டன. தி. க. வின் முடிவை ஒட்டியே தி. மு. க.வும் இப்பணியைச் செய்தது, தி. க. மூன்றாண்டுகள் இவ்வேலையைத் தொடர்ந்தது. பெயர்ப் பலகைகளில் இந்திக்கு மேலான முதல் இடம் என்பது மாறி, கீழான மூன்றாம் இடம் என ஆயிற்று.

17-7-1955இல் நடந்த தி. க, மத்திய குழு, இந்தியை எதிர்த்து ஆகஸ்டு முதல் நாள் நாட்டுக்கொடியைக் கொளுத்துவது எனத் தீர்மானித்தது. இந்தியை எப்போதும் திணிப்பது இல்லை என மத்திய மாநில அரசுகளின் சார்பில் 30-7-1955இல் தமிழக முதலமைச்சர் காமராசர் உறுதியளித்தார்.

மத்திய அரசால் நியமிக்கப்பட்ட பி. ஜி. கெர் தலைமையில் வந்த இந்தி ஆணையத்தை 1956இல் திராவிடர் கழகம் புறக்கணித்தது. அதற்கு, எ. பி. ஜனார்தனம் தலைமையில் கருப்புக் கொடி காட்டினர்.

வானொலியை ஆகாஷ்வாணி என அறிவிப்பதை எதிர்த்து மறியல் செய்த முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் 23-5-59இல் கைதானார்.

பி. ஜி. கெர் தலைமையில் ஆன ஆட்சிமொழி ஆணையம் பரிந்துரைத்த படி, இந்தித் திணிப்பிற்கு குடியரசுத் தலைவர் நடவடிக்கை எடுக்க ஆணையிட்டார். இந்தி பேசாதவர் எண்ணம் மதிக்கப்படும் என்ற நேருவின் உறுதிமொழி செல்லாதது ஆயிற்று. ''வாக்குறுதியைப் பறக்கவிடுவார்கள் என்றுதான் கொடி கொளுத்தும் கிளர்ச்சியை இன்னும் கைவிட்டு விடவில்லை. இந்தி யெனும் விஷ விருட்சத்தின் ஆணி வேரைக் கெல்லி எறிய ஒரே வழிதான் உண்டு: அது நாட்டுப் பிரிவினை. இதற்காகவாவது இந்தியத் தேசப் படத்திற்குத் தீ வையுங்கள்!'', என அறிக்கைவிட்ட பெரியார், 1960 ஜூன் 5ஆம் நாளை அதற்கான நாளாகக் குறிப்பிட்டார்.

சி.ப. ஆதித்தனாரின் நாம் தமிழர் இயக்கமும் இக் கிளர்ச்சியில் இறங்கியது. 1960ஜூன் காலையில் தடுப்புக் காவல் சட்டப்படி பெரியார், வீரமணி, குருசாமி, புலவர் இமயவரம்பன், ஆதித்தனார் ஆகியோர் கைதாயினர்- தமிழகம் முழுதும் தேசப்படம் எரிந்தது. 4000 பேர் கைது செய்யப்பட்டனர்.

இந்தித் திணிப்பை எதிர்த்து தி.மு.க போராட்டக் குழு ஒன்றை 1960இல் அமைத்து. ஈ.வெ.கி. சம்பத் தலைமையில், மதியழகன், கருணாநிதி, எஸ். முத்து, அன்பில் தருமலிங்கம், எஸ். ஏ. இராசமாணிக்கம், எ. கோவிந்தசாமி, க. அன்பழகன். ப. உ. சண்முகம். கண்ணதாசன் ஆகியோர் உறுப்பினர்கள். 1960 ஜூலை 31 இல் இந்தி எதிர்ப்பு மாநாடு லட்சக்கணக்கானோர் பங்கேற்க, அறிஞர் அண்ணா தலைமையில் நடந்தது. தமிழகம் வரும் குடியரசுத் தலைவருக்குக் கறுப்புக் கொடி காட்ட முடிவு செய்யப்பட்டது. இதற்கிடையில், மத்திய உள்துறை, அமைச்சர். குடியரசுத்தலைவர். பிரதமர் ஆகியோர் இந்தியைத் திணிப்பது இல்லையென்றும், 1965-க்குப் பின்பும் ஆங்கிலம் நீடிக்கும் என்றும் உறுதி யளித்தனர். உறுதிமொழியைக் கடிதம் வாயிலாகப் போராட்டக் குழுத் தலைவர் சம்பத் அவர்கட்கு நேரு எழுதி, கறுப்புக் கொடி ஆர்ப்பாட்டத்தைக் கைவிடக் கோரினார். இதன்படி, தி.மு.க-வும் போராட்டத்தை நிறுத்திக் கொண்டது.

ஆனால், நேருவின் உறுதிமொழி காப்பற்றப்பட வில்லை. 1963 ஏப்ரல் 13 இல் உள்துறை அமைச்சர் லால்பகதூர் சாஸ்திரி தாக்கல் செய்த ஆட்சி மொழி மசோதாவின் படி, 1965-க்குப்பின் இந்தி மத்திய அரசில் முன்னிடம் பெறும் என்பது தெளிவாயிற்று. இம் மசோதா குறித்துப் புதிதாக 1961 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் அமைந்த தமிழ்த் தேசியக் கட்சியின் தலைவர் சம்பத் இந் நூலாசிரியருக்கும் பிறமுக்கியக் கட்சி உறுப்பினர்

கட்சும், 17.4.63இல் இவ்வாறு மடல் எழுதினார்: ''பிரதமர் நேரு அளித்த வாக்குறுதிக்கு முற்றிலும் மாறாகப் பாராளுமன்றத்தில் கொண்டு வரப்பட்டிருக்கும் ஆட்சி மொழி மசோதா பற்றி எடுக்க வேண்டிய, நடவடிக்கை குறித்து முடிவு செய்யத் தாங்கள் 21 ஆம் நாள் தவறாது வருகை தர வேண்டுகிறேன்.'' தொடர்ந்து அக் கட்சி ஏப்ரல் 1963 இல் சென்னையில் நடத்திய மறியலில் கலந்து கொண்டு இந் நூலாசிரியரும் ஒரு நாள் சிறைப்பட்டார்.

இந்திக்கு எதிர்ப்புக் காட்ட அரசியல் சட்டத்தை எரிக்க முற்பட்ட த. தே. க. தலைவர் சம்பத் முன் கூட்டியே கைது செய்யப்பட்டு, ஒரு வாரத்திற்குப்பின் 4.5.63 இல் விடுவிக்கப்பட்டார். 1959 இல் இந்தி திணிக்கப்படமாட்டாது எனப் பாராளுமன்றத்தில் நேரு கொடுத்திருந்த உறுதி மொழி குறித்து அவர் சம்பத்திற்கு இப் போராடத்தின் போது எழுதிய மடலில், ''எந்த சர்க்காரும் இந்த உறுதிமொழியினின்று பிறழ முடியா தென நிச்சயமாகக் கூறுகிறேன்... இந்த மசோதா ஆங்கில உபயோகத்தைக்காலவரையின்றி நீடிக்கவே செய்கிறது.''

அரசியல் சட்டத்தை, இந்தி எதிர்ப்பிற்காக எரிக்க முற் பட்ட சம்பத்திற்கு உறுதிமொழி கொடுத்த நேரு அடுத்த ஆண்டு 1964 மே 27இல் மறைந்த சில மாதங்களில் காங்கிர சுடன் த. தே. க. இணைந்தது. காமராசர், பிற்காலத்தில் பிரதமர் இந்திரா ஆகியோரின் நம்பிக்கையையும் மதிப்பை யும் சம்பத் பெற்றார்.

17 நவம்பர் 1963இல் அரசியல் சட்டத்தின் ஆட்சி மொழி பற்றிய 17ஆம் பிரிவைக் கொளுத்த முயன்ற அறிஞர் அண்ணா சிறைப்படுத்தப்பட்டார். தி. மு. க. வின் முன் னணித் தலைவர்களும் பல ஆயிரக் கணக்கான தொண்டர் களும் கிளர்ந்தெழுந்து சிறைப்பட்டனர். 1965 ஜனவரி வரை அறப்போர் தொடர்ந்தது.

## மாபெரும் தியாகம் :

'மனோன்மணியம்' சுந்தரனார், மறைமலையடிகள், திரு. வி. க., நாவலர் சோமசுந்தர பாரதியார் முதலியோர் ஊட்டி வளர்த்த தமிழ் உணர்வை, மொழி உரிமைக் குரலாகப் பெரியாரும் அண்ணாவும் நிலைப்படுத்தினர். உரிமைக் குரலை மக்கள் போராட்டமாக தி. மு. க. மாற்றிவிட்டது. 1965 ஜன. 26 குடியரசு நாளைத் துயர நாளாக அனுசரிக்க முடிவு எடுத்தது. முந்திய நாளே, அண்ணா, நாவலர் நெடுஞ்செழியன், கலைஞர் கருணாநிதி உள்ளிட்ட 1500-க்கும் மேற்பட்ட தி.மு.க.வினர் கைது ஆயினர்.

தமிழக மாணவரும் இளைஞரும் கட்சிகளைக் கடந்து மொழி உரிமை காக்க எரிமலை யென வெடித்துக் கிளம்பினர். சின்னச்சாமி, சிவலிங்கம், அரங்கநாதம், வீரப்பன், முத்து, சாரங்கபாணி ஆகியோர் தமிழின் வீழ்ச்சியைத் தாளாது தீக்குளித்து மாண்டனர்.

பேராசிரியர் இலக்குவனார், பன்மொழிப் புலவர் அப்பாதுரையார், சி. பா. ஆதித்தனார் ஆகியோர் சிறைப்பட்டனர். கா. காளிமுத்து, ராசா முகமது, நா. காமராசன், நாவளவன், பெ. சீனிவாசன் முதலிய மாணவர் தலைவர்கள் சிலிர்த்துக் கிளம்பினர். பக்தவச்சலனாரின் மாநிலக் காவலர்களும், லால்பகதூர் சாஸ்திரியின் இந்திய ராணுவத்தினரும் தடி கொண்டும், துப்பாக்கி கொண்டும் தமிழகப் புரட்சியை அடக்கியாண்டனர். அண்ணாமலைப் பல்கலைக் கழக மாணவர் இராசேந்திரன் துப்பாக்கிச் சூட்டிற்கு முதற் பலியானார். தொடர்ந்து நூற்றுக்கும் மேற்பட்டவர்கள் போராட்டத்தில் உயிர் ஈந்தனர். பாதுகாப்புச் சட்டப்படி பிப் 1965 இல் கைதான கலைஞர் கருணாநிதி பாளையங்கோட்டை வெப்பத்தில் தனிமைச் சிறைவாசம் செய்தார். கண்டிக்கத் தக்க வகையில் வன்முறைகள் சில நடந்தாலும், 1965ஆம் ஆண்டு மொழிப்போர், தியாகத்திற்கும் எழுச்சிக்கும் பெயர் பெற்ற ஒன்றாகத் தமிழக வரலாற்றில் என்றும் இலங்கும்.

## இரு மொழி:

1967 பொதுத் தேர்தலில் ஒன்பது மாநிலங்களில் காங்கிரசு தோற்றும் மத்தியில் ஆட்சிக்கு வந்தது 8.1.68 இல் ஆட்சிமொழித் திருத்தச் சட்டத்தை நிறைவேற்றியது இதன்படி, ஆங்கிலம் உண்மையான இணைமொழியாக மத்திய அரசால் ஆக்கப்படவில்லை. சில குறிப்பிட்ட காரியங்கட்கு மட்டும் பயன்படுத்தப்படும் கூடுதல்மொழி யாக ஆயிற்று. 1959இல் நேரு அளித்த உறுதி மொழிக்கு மாறாகவே இது அமைந்தது. இதனால், தமிழக மாணவர் மீண்டும் கிளர்ச்சியில் இறங்கினர்

அப்பொழுது தமிழக முதல்வராக அறிஞர் அண்ணா இருந்ததால். தமிழும் மற்ற தேசிய மொழிகளும மைய அரசின் ஆட்சி மொழிகளாக ஆக வேண்டும். அதுவரை ஆங்கிலம் நீடிக்க வேண்டும் என்ற தீர்மானத்தை சட்ட சபைநிறைவேற்றியது. அத்துடன் மும்மொழித் திட் டத்தை நீக்கிவிட்டு, தமிழ்-ஆங்கிலம் எனும் இரு மொழி களே இம் மாநிலப் பள்ளிகளில் இடம் பெறும் எனவும் 23.1.86 இல தீர்மானிக்கப்பட்டது. 1967 முதல் இந்தி ஆதிக்க எதிர்ப்பாளர்களையே தமிழர்கள் தொடர்ந்து ஆட் சிக்குத் தேர்ந்தெடுக்கின்றனர்.

## ஆதிக்க வெறி:

தமிழரின் ஒருமித்த உறுதியான குரலுக்குச் செவி சாய்த்து, மக்களாட்சி மரபுப்படி மைய அரசு நடந்து கொள்ளும் என்ற நம்பிக்கையில் மொழிக்கிளர்ச்சிகள் நிறுத்தப்பட்டன. ஆனால் 1976 நெருக்கடி ஆட்சியின் போது கல்வியைப் பொதுப் பட்டியலுக்கு மாற்றியும், தொடர்ந்து மைய அரசுப்பள்ளிகளை நிறுவியும் 1985 இல் புதிய கல்வித் திட்டத்தைக் கொண்டுவந்தும், இந்தியில் குறிப்பெழுத வேண்டும் என்று ஆணைகள் பிறப்பித்தும்,

வானொலி, வானொளி நிகழ்ச்சிகள் வழியும்.இன்னும் பல மறைமுகமான, நேரடியான வழிகளிலும் இந்தித் திணிப்பை மைய அரசு தொடர்கிறது.

தமிழகத்தில் இந்தி ஆதிக்க எதிர்ப்பை மீண்டும் உலகிற்குக் காட்டுவதற்கு 1978இல் தி. க.வும், தி. மு. க,வும் தனித் தனி மாநாடுகள் நடத்தின. செப்டம்பர் 1985இல், ரயில் நிலைய இந்தி எழுத்து அழிப்புக் கிளர்ச்சியில் ஈடுபட்டு, தி க. பொதுச் செயலாளர் வீரமணியும், அய்யாயிரம் தோழர்களும் சிறைபட்டனர். இந்திய தேசிய மொழிகள் அனைத்தும் மைய ஆட்சி மொழிகள் ஆகும் வரை ஆங்கிலம் மட்டுமே நீடிக்க வேண்டும் என்ற எம். ஜி. இராமச்சந்திரனார் தீர்மானத்தை 13-11-1986இல் சட்ட மன்றம் நிறைவேற்றியது. கொலைக்கும், பெருங்கொடுமைக்கும் ஆளாகும் இலங்கைத் தமிழரின் ஈழ விடுதலை உள்ளிட்ட முக்கிய சிக்கல்களில் கவனம் செலுத்திப் பல கிளர்ச்சிகள் நடத்தும் கட்டத்திலும், டிசம்பர் 1987இல் தி. மு. க. நடத்திய மொழிக்கான அறப்போரில் சுமார் இருபதாயிரம் பேர் அரசியல் சட்ட ஆட்சி மொழிச் சரத்தை எரித்துச் சிறைப்பட்டனர். அவர்களில் நால்வர் உயிர்ப்பலி ஆயினர். மற்றும் கோவை நரசீபுரம் பாலசுப்பிரமணியம் போன்றோர் தீக்குளித்தனர். பாராளு மன்ற உறுப்பினர் வை. கோபாலசாமியும், தமிழக சட்ட மன்ற உறுப்பினர்கள் பத்துப் பேரும் இக் கிளர்ச்சியில் பங்கேற்றனர். பேராசிரியர் க. அன்பழகன், மு. இராமநாதன், எஸ். பாலன். எ. செல்வராசன், பரிதி இளம்வழுதி, பி. பொன்னுரங்கம், ஆர். சின்னச்சாமி, எம் அப்பாவு, சி ஆறுமுகம், வி கே. ராஜூ ஆகியோர் அரசியல் சட்டத்தின் ஆட்சி மொழிச் சரத்தை எரித்த குற்றத்திற்காகச் சட்ட மன்ற உறுப்பினர் பதவியிலிருந்து டிச.86இல் அண்ணா தி மு.க. அரசின் தீர்மானப்படி நீக்கப்பட்டனர். அப்படி நீக்கியது செல்லும் என 16. 4. 87 இல் சென்னை உயர்நீதி மன்றம் தீர்ப்பளித்துள்ளது இப்பொழுது வழக்கு டெல்லி உச்ச நீதி மன்றத்திலிருக்கிறது. தீர்ப்பு எப்படியாக இருப்பினும்

இந்தி ஆதிக்கத்திற்குச் சார்பான அரசியல் சட்டத்தை மாற்றுவதற்குத் தேவையான தியாகத்திற்குத் தமிழர்கள் அணியமாகவே இருக்கிறார்கள்! மொழி, பண்பாட்டு ஆதிக்கத்தின் கொடுமையை இனியும் தமிழகம் அனுமதிக்காது. ★

"சதவீதக் கணக்குகள் எப்படியானாலும், ஹிந்தி பேசுவோர் நாடு முழுவதும் பரவியிருக்கவில்லை. ஒரே பிரதேசத்தில்தான் குவிந்திருக்கிறார்கள்...இன்று ஆங்கிலத்தை அதன் பயனைக்கருதித்தான் படிக்கிறோமேயன்றிப் பலாத்காரத்துக்கு அடங்கிப் படிக்கவில்லை ... ஆங்கிலேய ஆட்சியின் போது ஆட்சியாளர்கள் மேலும் அவர்களுடைய மொழியின் மேலும் ஏற்பட்ட வெறுப்பு உணர்ச்சிதான் இப்போது மீண்டும் நம்முடைய நிகழ்கால ஹிந்தி ஆட்சியாளர் மேலும் ஏற்படும்...ஹிந்தித் திணிப்பினை மூலம் சமத்துவத்தை நாசமாக்கப் பார்க்கிறார்கள். செயற்கையாக ஒரு ஏற்றத் தாழ்வை உண்டாக்குவது பாதிக்கப் பட்டவர்களுக்கு எல்லையில்லாத இதய தாபத்தை உண்டாக்கி அவர்களைத் தீவிரமாகத் துபுறுத்தும். தங்களைக் கீழ்த்தரக் குடிமக்கள் ஆக்குகிற ஆட்சி மொழிப் பட்சபாதச் சட்டம் மக்களைக் கொதிப்படையச் செய்யும், தேச ஐக்கியத்துக்கு ஆபத்து ஏற்படும்."—மூதறிஞர் சக்ரவர்த்தி ராஜகோபாலாச்சாரி —23.6.1963

"துடிக்கின்ற இளமையிலே அறிவு மேய்ச்சல்
தொடங்கிவிட்டால், செந்தமிழ்ப் பால அருந்தி
விட்டால்
அடிக்கின்ற புயல் காற்றும் ஒடுங்கிப் போகும்!
அடுத்துவரும் தலைமுறையும் நிமிர்ந்து நிற்கும்!"
— பாவலரேறு பெருஞ்சித்திரனார்
- நூல் "பாவேந்தர் பாரதிதாசன்"

○ " ஆங்கிலத்துக்குப் பதிலாக ஹிந்தியை ஏற்றுக்கொள்ளும்படி ஆட்சிமொழி மசோதா கூறுகிறது. மொழிகள் ஜாபிதாவில் பதினான்கு புராதன மொழிகள் இருக்கும்போது ஹிந்தி என்ற இளம்மொழியை மட்டும் இந்தச் சிறப்புக்கு ஏன் தேர்ந்தெடுக்க வேண்டும்? இந்திக்காரர்களுக்கு எடுத்த எடுப்பிலேயே சலுகை கிடைக்கிறது... ஹிந்தி பேசாத மக்கள் மனதில் எழும் மனத்தாங்கல்கள் இந்திய மக்களின் ஒற்றுமைக்கும் ஒருமை உணர்ச்சிக்கும் உலை வைத்துவிடும்" பேராசிரியர் எம். ரத்தினசுவாமி 30-6-1963

○" எந்த நாட்டுக்கும் மொழிதான் அடிப்படையாகும். இந்நாடு தமிழ்நாடு. இந்நாட்டு மொழி தமிழ் மொழி. இந்தியோ வடநாட்டு மொழி; அந்நிய நாட்டு மொழி. எனவே, அதற்கும் நமக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை... அந்த நாட்டு மொழியை இந்த நாட்டில் கொண்டு வந்து புகுத்துவது தவறானது, பயனற்றதுங்கூட" திருத்தகு அருள் தங்கையா - 1948.

○ " அரசியல் சட்டம் என்பது திருத்தவே முடியாத வேதப் புத்தகம் அல்ல. அப்படி வேதப் புத்தகமாக இருந்தாலும்கூட அதில் இருக்கும் தவறான தகவலை எடுத்துக் கூறிவிமர்சனம் செய்கின்ற தந்தை பெரியாரின் வழிவந்தவர்கள் நாங்கள்" கா. காளிமுத்து, நூல் - ' இந்தி எதிர்ப்புப்போர்ப்பரணி",

○"தென்னிந்தியாவில் உள்ள திராவிட மக்களுக்கு ஆங்கிலம் எப்படியோ அப்படித்தான் இந்தியும் அந்நிய மொழி. அதைத் திணித்தால் தியாகங்கள் புரிந்து சம்பாதித்த ஒற்றுமையையும் ஐக்கியத்தையும் நாம் நிச்சயமாக இழந்து விடுவோம்"—தொழில் அதிபர் காலஞ் சென்ற கருமுத்து தியாகராஜ செட்டியார் - 25-8-1963.

○ '' அரியானாகாரனுக்குப் பஞ்சாபி அந்நிய மொழி; பஞ்சாபிக்கு இந்தி அந்நியமொழி என்றால் அங்கிருந்து இங்கே வெகு தூரத்தில் இருப்பவர்களுக்கு இந்தி சொந்த மொழியா? ''
முஸ்லீம்லீக் தமிழ் மாநிலச் செயலாளர் பன்மொழிப் புலவ அப்துல் லதீப்; ' விடுதலை ' - 16-1-1987.

□ '' ஐக்கிய உணர்ச்சி ஏற்படுத்த இந்தி அவசியம் என்று சொல்லுவது அர்த்தமற்ற பேச்சு. ஆங்கிலத்திலும் இந்தி அல்லாத வேறு பிராந்திய மொழியிலும் ஒருவர் எவ்வளவுதான் தேர்ச்சி பெற்றிருந்தாலும், இந்தி பேசும் ராஜ்ஜியத்தைச் சேர்ந்த சாதாரணக் கல்வியறிவுள்ளவர் அவரைவிட அதிக வாய்ப்புடையவராகவே இருப்பார் நம் எதிர்காலச் சந்ததியினருக்கு நல்வாழ்வு பெறச் சந்தர்ப்பம் கிடைக்காதபடி இப்போதே அவர்களை ஈன ஜாதியினராக ஆக்கி வைக்கிறோம், இந்தி சாதி - இந்தி அல்லாத சாதி என்று மேல்சாதி கீழ்சாதி முறைகளை ஏற்படுத்துவதுதான் இந்த ஆட்சிமொழிச் சட்டத்தின் விளைவாக முடியும் ''
கோவை தொழிலதிபர் ஜி. கே. சுந்தரம் - 21-7-1963.



'' இந்தியை எதிர்க்காதவன் தமிழன் அல்லன்; அறிவாளி அல்லன் ''
இனமானப் பேராசிரியர் க. அன்பழகனார்
'விடுதலை' - 15-3 1987.

○

# 19. இறுதிவரை எழுச்சி கொள்வோம்

தூயதோர் இலக்கை நோக்கித் துணிவுடன் தொடர்ந்து செல்வோர் தோல்வியே கண்டதில்லை. இது நம் மனதில் பதியவேண்டும். சமுதாயத்தின் தன்மானத்தையும், சமத்துவ நிலையினையும் தனித்தன்மையையும் காத்துக் கொள்ள வேண்டுமென விழைவது விழிப்புள்ளோரின் இயல்பான போக்கு.

கூடி நிற்கும் சமுதாயங்களை வெறுத் தொதுக்கித் தனித்து வாழும் விருப்பம் நமக்கில்லை. முறைமையான அடிப்படையில் இணைந்து வாழ்வதற்கான அமைப்பினை ஏற்படுத்திக்கொண்டால்தான் ஒற்றுமை நிலைக்குமென்கிறோம். மற்றவரை ஆளவேண்டுமென்ற எண்ணமோ' ஆதிக்கவெறியோ. அரசியல் சூழ்ச்சியோ தமிழருக்கில்லை. பண்பாட்டுச்சிறப்பினையும்,வரலாற்றுத்தொன்மையினையும்' இலக்கிய வளத்தினையும் எண்ணி இருமாந்த காரணத்தால் அரசியலில் மற்றத் தேசிய இனங்களைச் சிறிதாக மதிக்கும் குணம் படைத்தோர் அல்லர் நாம். தமிழைவிட இந்தி மிகச் செம்மையான மொழியாக இருப்பினும் கூட அதன் ஆதிக்கத்தை எதிர்க்கத்தான் செய்வோம், என்றென்றைக்கும் இரண்டாந்தரக் குடிமக்களாகத் தள்ளப்படும் இழிதகை நிலையினைத் தவிர்க்கவே மொழி உரிமை இயக்கத்திற்குத் துணை நிற்கிறோம்.

இந்திக்குத் தனிச்சலுகை தருவதால், மற்றவர்கள் மொழி ஆதிக்கத்திற்கு அடிமை ஆவர். அதனால் பிறவகைச் சுரண்டலுக்கும் வழி ஏற்படும், சலுகை விழைவோருக்கும் சமத்துவம் வேண்டுவோருக்கும் இடையில் சமாதானம் (compromise) காணமுயல்வது வீண்வேலை. இந்தியத் தேசிய மொழிகள் அனைத்திற்கும் சமத்துவம் அளிக்கும்

வகையில் அரசியல் சட்டம் திருத்தப்படும் வரை மொழி உரிமைப்போர் தொடர்ந்து நீடிக்க வேண்டும்.

முதலில் தேர்தல் தவிர்த்த மக்களாட்சி முறைகள் அனைத்தின் மூலமாகவும் தங்கள் மொழி உரிமை வேட்கையை தமிழர்கள் வெளிக்காட்டினர். 1967-க்குப் பின் பொதுத் தேர்தல்கள் மூலம், அதை உறுதிப்படுத்தி உள்ளனர். இந்தி ஆதிக்க எதிர்ப்பு அமைச்சுகளைத் தொடர்ந்து ஆதரிக்கின்றனர். 1967-இல் பாராளுமன்றத் தேர்தலுக்கு நின்ற திராவிட முன்னேற்றக் கழகத்தின் வேட்பாளர் அனைவரையும் தேர்ந்தெடுத்தனர். மொழிக் கொள்கையில் குறை கண்ட காரணத்தால், தங்களுடைய சில நல்ல தலைவர்களையும், நிர்வாகத்திறன் வாய்ந்தவர்களையும் கூடத் தோல்விகாணச் செய்தனர். இதனினும் சிறந்த முறையில் எப்படி ஒரு சமுதாயத்தினர் தங்களுடைய ஆழ்ந்த பொது விருப்பத்தினை (General will) வெளிப்படுத்த முடியும்?

இதனால் ஒன்று தெளிவாகிறது; மொழிக் கொள்கையைப் பொருத்தவரை மாநிலத்தாரின் விருப்பத்தை நிறைவேற்றும் வண்ணம் செயல்படுவதற்கான முழு உரிமையும் தமிழக அமைச்சிற்கு உண்டு. அரசியல் சட்டத்தைக் காட்டி மத்திய அமைச்சு மாறுபட்ட கொள்கையைத் திணிக்க விரும்பினால் அதை முயன்று பார்க்கத் துப்பாக்கி முனையில் தான் முடியும். அப்படியொரு நிலைவரின் அதையும் எதிர்த்து நிற்கத் தமிழர்கள் துணிய வேண்டும். தமிழ்ச் சமுதாயத்தில் பல்வகைத் தொழில் புரிவோரும், மொழி உரிமை காக்கும் பணியில் ஒன்றுதிரள வேண்டும்.

இந்திமொழியினர் அல்லாத மாணவரின் நிலை இரு தலைக்கொள்ளி எறும்பின் நிலை. இன்றைய மத்திய ஆட்சி மொழிக் கொள்கை நீடித்தால் அவர்களுடைய எதிர்காலம்

கேட்டிற்குள்ளாகும. அஃதன்றி, மொழிச் சமத்துவம் வேண்டித் தீவிரப் போராட்டத்தில் ஈடுபடின் இன்றைய கல்வி போகும். எவ்விதத்திலும் அவர்களுக்கு இழப்பே. இதை உணர்ந்தேனும் பொறுப்புள்ள பெரியவர்கள் நியாயத்திற்கான போராட்டத்தில் தாங்களே முன்னின்று செயலாற்ற வேண்டும். மாணவர்கள் அமைதியான, ஆனால் உறுதியான, வழிகளின் மூலம் அத்தகைய விழிப்புள்ள நல்லோருக்கு ஆதரவு தரவேண்டும். உரிமைப் போரில் முன்னிற்போர் சுணக்கமோ, சோர்வோ காட்டினால் தட்டியெழுப்பிக் கடமையை நினைவுபடுத்த வேண்டும். உழவர், தொழிலாளர், மற்றுமுள்ள பொதுமக்கள் ஆகிய அனைவரும் மொழியுரிமை இயக்கத்திற்குத் துணை நிற்க வேண்டும். கேடுதரும் மொழிநிலைத் தாழ்வைத் துடைக்க வேண்டும். அந்நிலையில் உறுதி கொண்ட சமுதாயத்தை எவ்வகையிலும் அடக்கியாள யாரும் முயலார் : முயன்றிடின் விரைவில் தோற்பார்.

உணர்ச்சிப் பெருக்கினை ஒழுங்குபடுத்தி, திட்டமிட்டுச் செயலாற்றினால் நிலையான பயனை நிச்சயம் அடையலாம். அஃதன்றி அவசரக்கோலத்தில் நாம் உணர்ச்சிகளை அள்ளித் தெளித்துவிடின் நம்மை ஏய்க்க இருப்போர் அதைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள முயல்வர். மேலும் மாணவர்களின் பணி அமைதியாக இருப்பதோடு அவர்களின் கிளர்ச்சிகள் நாகரிகமானதாகவும் ஒழுக்கம் மிகுந்ததாகவும் மற்றவருக்கு எடுத்துக்காட்டாகவும் அமைய வேண்டும். பொதுப்பணியாற்றும் வேகத்தில் படிப்பின் அருமையை மறத்தல் கூடாது. கல்லாத வாழ்வு ஒரு பொல்லாத வாழ்வு; சுமை நிறைந்த வாழ்வு; சுவையற்ற வாழ்வு.

இலட்சிய நோக்கும், கொள்கைப் பிடிப்பும், கட்டுப் பாடும், விடாமுயற்சியும் கொண்ட இளைஞர் உலகு எழ வேண்டும். ''பண்பு உடையார் பட்டுண்டு உலகம்'' என்ற வள்ளுவரின் சொல் எக்காலத்திற்கும் பொருந்தும். இப்-பேருண்மையை மறந்து சொல்லொன்றும் செயலொன்றுமாகத் திரிவோரின் எண்ணிக்கை மிகுமாகில் நம் சமுதாயத்தின் நலம் எல்லா வழிகளிலும் கெடும்; பாழ்பட்டு வரும் பாதை யைச் செப்பனிடும் பெரும் பணியைச் சுமக்கவரும் இளைஞர் சமுதாயம், நிறைந்த அறிவைப் பெற்றதாக இருக்க வேண்டும்.

இன்னொன்றையும் மனதிற் கொள்ளவேண்டும். மொழிச் சமத்துவ இயக்கத்தில் ஈடுபடும் இளைஞர்கள் நம் சமுதாயத்தின் பொருளாதார நிலை தாழ்ந்து வருவதையும் கருத்தில் கொள்ளவேண்டும்: வளர்ச்சி வேலைகள் தடைப்படு கின்றன; தொழில் மந்தம் தொடர்கிறது. வேலையின்மை மிகுகிறது; இந்தநிலை நீடித்தால் வறுமை சூழும். ஆக மொழி உரிமை நலத்தையும், பொருள் நலத்தையும் காக்க வேண்டிய இளைஞர்கள் தங்களைப் பொறுமையோடு ஆனால் பெருமை தரும் வகையில் - உருவாக்கிக் கொள்ள வேண்டும்.

நம் மாநிலத்தின் முதுபெருந் தலைவர்களும், தகுதிசால் முன்னாள் முதல்வர் அறிஞர் அண்ணாவும், மற்றும் உரிமை வாழ்வுடைய சமுதாய நலம்பேணும் நல்லவரும் இளைஞரும் சேர்ந்து நின்று, கட்சி நிலைகடந்து செயலாற்றிய சிறப்பு பழங்கதையல்ல.

தமிழகத்தின் தனித்தன்மையைக் காத்து வளர்ப்பதிலும், அதன் முன்னேற்றத்திற்குத் திட்டமிட்டுச் செயலாற்றுவதிலும், முனைந்து நிற்கும் தலைவர்களும் இயக்கத்தார்களும், மொழியுரிமை இலக்கினை மறவாது பணியாற்றுவர் என்பதும், அப்பணியை ஏற்கும் அவர்களுக்குத் துணைநிற்கும் கடமையைத் தமிழர்கள் துறவாது செய்வர் என்பதும் நமது ஆழ்ந்த நம்பிக்கை.

இலட்சியப் பாதையின் எளிமையும் கடுமையும் பயணத்திலிருப்போர் பண்பினைப் பொருத்தது. சுயநலம் துறந்த சமூக நோக்கும், துன்பங்கள் சூழ்ந்தகாலை தளரா உள்ளமும், தோல்வி கண்டு துவழா நெஞ்சும், அல்லல் வந்துற்றபோது அசையா மனமும், ஒன்றுபட்ட உழைப்பும், ஆழ்ந்த அறிவும், தேர்ந்த திட்டமும், தொடர்ந்த முயற்சியும் நமக்குத் துணைவருவனவாக!

நமக்குத் தாழ்வுற்ற பிழைப்பு வேண்டாம்; தலை நிமிர்ந்த வாழ்வு வேண்டும். ★

○ "மொழிவழித் தேசிய உணர்வே உண்மையான தேசிய உணர்வு எனக் கூறியவர்கள் இந்தியா முழுமைக்கும் ஒரு தேசியமொழி என்ற கருத்தை ஏற்கவில்லை... தேசிய மொழியாக இந்துஸ்தானி இருக்க வேண்டும் என்பதற்கு மகாத்மா காந்தி அளித்த ஆதாவின் காரணமாக மற்ற தலைவர்களும் அதற்கு ஆதரவு அளித்தார்கள் இதனால் ஆட்சிமொழி பற்றிய விவாதம் அரசியல் நிர்ணய சபையில் நடைபெற்ற போது, மற்ற வளர்ச்சிபெற்ற மொழிகளைப் பற்றிக் கணக்கில் எடுத்துக் கொள்ளாமல் இந்துஸ்தானியா அல்லது இந்தியா என்பது பற்றி மட்டுமே விவாதிக்கப்பட்டது. இது முற்றிலும் தவறான அணுகுமுறையாகும்". —மாவீரர் ப. நெடுமாறன் நூல், "மத்திய–மாநில உறவு: சில குறிப்புகள்" (1985)



○ '' நம்முடைய இயக்கத்தினுடைய கண்ணான குறிக்கோள் தாய்மொழியைக் காப்பது ; தமிழன் இரண்டாந்தரக் குடிமகனாக ஆகிவிடாமல் பாதுகாப்பது; தமிழனுடைய உரிமைகளைக் கேட்பது, மீட்பது '' - கலைஞர் மு. கருணாநிதி, முரசொலி 12-5-87



○ ''தென்னாட்டிலிருக்கிறவர்கள் இந்தியைப் படிக்கிற காரணத்தால், வடநாட்டில் இருக்கிறவர்கள் தென்னாட்டு மொழியைப் படிக்க வேண்டும் என்று வைத்தார்களே அது நடைமுறைப் படுத்தப்பட்டிருக்கிறதா இல்லையே? அது நடைமுறையில் வராது? மூன்று மொழி என்பது சிறார்களுக்கு எவ்வளவு சுமை! அது தேவையா? என்ன பயன்? இனத்தை உயர்த்துவதற்கு அவர்களுடைய தாய்மொழி, உலகத் தொடர்பிற்கும் அறிவியல் வளர்ச்சிக்கும் ஆங்கிலம் என்று சொல்லக்கூடிய இருமொழிக் கொள்கைதான் நடைமுறைப் படுத்தக் கூடியது. இந்த நிலையை மாற்றி, மும்மொழித் திட்டத்தைக் கொண்டுவரப் பல தந்திரங்களைச் செய்கிறார்கள். புதிய எஜமானத்துவத்தை, ஆதிபத்தியத்தை உண்டாக்க நினைக்கிறார்கள் ''

தமிழர் தளபதி கி. வீரமணி 2-3-1986 '' புதிய கல்வித் திட்டம் '' - நூல்.



| | பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 1 | 7 | 6 | ஊற்றுக்கோலாக | ஊற்றுக்காலாக |
| 2. | 12 | 12 | அதேபிய | அரேபிய |
| 3. | 16 | 17 | திராவிடக்கழகம் | திராவிடர்கழகம் |
| 4. | 26 | 28 | அதே போன்று என்பதை நீக்குக | |
| 5. | 27 | 14 | ஒரு தேசியம் ஒரு நாடாகலாம் எனப் படிக்கவும் | |
| 6. | 30 | 8 | முதலிய | முதலியவற்றைத் திணிக்கும் |
| 7. | 34 | 4 | alian | alien |
| 8. | 43 | 22 | சொத்தை? | சொத்தா? |
| 9. | 54 | 31 | neutra | neutral |
| 10. | 55 | 31 | மைதான் | சுமைதான் |
| 11. | 61 | 1 | ர்நிவாக | நிர்வாக |
| 12 | 61 | 6 | படுத்தும் | படும் |
| 13. | 62 | 6 | சுக்கல் | சிக்கல் |
| 14. | 69 | 2 | நடந்தது | கூட்டம் நடந்தது |
| 15. | 71 | 24 | முருசேகன் | முருகேசன் |
| 16. | 72 | 13 | 938 | 1938 |
| 17. | 74 | 7 | என்பது | என்னும் |
| 18. | 74 | 8 | தீர வேணிடும் | தீர வேண்டும் |
| 19. | 78 | 4 | இந்திகு | இந்திக்கு |
| 20. | 86 | 4 | புலவ | புலவர் |

—o—

இந் நூலாசிரியரின் பிற நூல்கள் :

1. மலையாள மா கவிஞர், சீர்திருத்தச் செம்மல் **குமாரன் ஆசான்.** முதற்பதிப்பு : 1977
[படிகள் கைவசம் இல்லை]

2 வருணசாதி உருவாக்கம் - முதற்பதிப்பு : 1987
[விலை ரூபாய் - 6.00]

வெளியீடு : **பூங்குன்றன் பதிப்பகம்**
திருவேங்கடம் தெரு,
வடகோவை, கோவை-641 002.



1935 டிசம்பர் 23-இல் சருவப்ப நாயக்கனூரில் உழவர் குடியில் வெங்கடசாமியின் மகனாகப் பிறந்த கிருஷ்ணசாமி, 1977-78 இல் தனக்கென ஏற்றுக் கொண்ட பெயர் கு. வெ. கி. ஆசான்.

உடுமலை அரசுயர் பள்ளி, சென்னை பச்சையப்பன் கல்லூரி, பெங்களூர் அரசினர் சட்டக் கல்லூரி ஆகியவற்றில் பயின்ற இவர் பொருளாதாரம், வரலாறு, அரசியல், மெய்யறிவு ஆகியவற்றில் முதுகலைப் பட்டங்கள் பெற்றவர். முதல் மூன்றும் சென்னை பல்கலைக் கழகத்தில், நான்காவது திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில், மெய்யறிவுப் பட்டத்தில் முதல்வகுப்பும் பல்கலைக் கழக முதன்மையும். 1962-இல் வழக்குரைஞராகப் பதிவு. தனிப்பயிற்சிக் கல்லூரி ஒன்றைக் கோவையில் நடத்துகிறார்.

ஆக. 1962, முதல் ஜூன் 1964 வரை பொள்ளாச்சியில் வாழ்ந்த காலத்தில் தமிழ்த் தேசிய கட்சியில் பொறுப்பேற்று நேரடி அரசியலில் ஈடுபாடு. அதற்கு முன்னும் பின்னும் அத்தகு ஈடுபாடில்லை.

ஏப்ரல் 1963, செப்டம்பர் 85 ஆகிய மாதங்களில் மொழி உரிமைக் கிளர்ச்சிகளிலும், மே 81-இல் மனுதரும எரிப்பிலும் ஈடுபட்டுச் சிறைப்படுத்தம். ஆகஸ்ட் 85-இல் ஈழத் தலைவர்கள் நாடு கடத்தப்பட்டதை எதிர்த்துக் கைது. ஆக. 87 இல் இந்திய-இலங்கை ஒப்பந்த எரிப்பில் கைது.

மொழி உரிமை-1968, சீர்திருத்தச் செம்மல், மலையாள மாகவிஞர் குமாரன் ஆசான்-1977, வருணசாதி உருவாக்கம் 1987 ஆகிய நூல்களை இயற்றியுள்ளார். 1986 முடிய ஆறு ஆண்டுகள், ஊரும் உலகும் (இங்கும் அங்கும்) எனும் மாத இதழ் நடத்தினார், ஜூலை 83-இல் இனக்கொலைக்கு ஆளான இலங்கைத் தமிழர் வரலாற்றைக் கோவை மாலை முரசுவில் 22 தொடர் கட்டுரைகளாக எழுதினார். அவ்வப்பொழுது உண்மை, விடுதலை, குறளியம் இதழ்களுக்கு எழுதுகிறார்.

2-9-1970 இல் பெரியார் தொடங்கி வைத்த சிந்தனைப் பேரவையின் தலைவர். 1979 முதல் தி. க. பொதுச் செயலாளர் கி. வீரமணி அவர்களைப் புரவலராகக் கொண்ட பகுத்தறிவாளர் கழகத்தவர். ஜூலை 1987 இல் அதன் மாநிலத் தலைவராக அமர்த்தம்.